

*தீபஸ் த்வமேவ ஜகதாம் தயிதா ருசிஸ் தே*
*தீர்க்கம் தம: ப்ரதிநிவர்த்தய மிதம் யுவாப்யாம் ।*
*ஸ்தவ்யம் ஸ்தவ ப்ரியமத: சரணோக்தி வச்யம்*
*ஸ்தோதும் பவந்த மபிலஷ்யதி ஜந்து ரேஷ: ।।*

விளக்கொளியெம்பெருமானே! உலகங்கள் அனைத்துக்கும் ஒளியைத் தரும் தீபமாக உள்ளவன் நீ ஒருவனே. ஒளியையுடைய மற்றைப் பொருள்களுக்கெல்லாம் நீயே ஒளியைத் தருகின்றாய். உன்னைக் கண மும் பிரியாது நிற்கும் பெரிய பிராட்டி தீபமாய் நிற்கும் உனக்கு ஒளியாய்த் திகழ்கின்றாள். இவ்வுலகம் நெடுங்காலமாய் அஞ்ஞான மென்னும் இருளில் மூழ்கிக் கிடக்கின்றது. இந்த இருளைப் போக்க உங்கள் இருவரால் மட்டுமே முடியும். பிறர் துதிப்பதற்கு ஏற்ற பெருமையும் தகுதியும் உனக்கே உள்ளன. உன் குணங்களைப் புகழ்ந் தால் உனக்கு மிக்க மகிழ்ச்சியுண்டாகி அருள் புரிவாய். உனக்கு அடைக்கலம் என்று வாயினால் கூறினாலே நீ வசப்பட்டுவிடுகின் றாய். இத்தகைய பெருமையுடைய உன்னை இந்த ஜந்து (இந்த உயிர்) துதிக்க விரும்புகின்றது. இதற்கு வேண்டிய அறிவை நீயே அருள வேண்டும்.

--ஸ்ரீசரணாகதி தீபிகை-3
--ஸ்ரீமந் நிகமாந்த மகாதேசிகன்



# ஸப்தகிரி

அக்டோபர் - 1995


தனிப்பிரதி ரூ. 2 மலர் 26
வருடச்சந்தா ரூ. 24 இதழ் 5



சிறப்பாசிரியர் :
திரு. என். ரமேஷ்குமார், ஐ.ஏ.எஸ்.
செயலாட்சித்தலைவர்,
தி.தி.தேவஸ்தானம்,
திருப்பதி.

ஆசிரியர்:
திரு. என்.எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

அச்சிடுபவர்:
திரு. பி. மோகன்ராவ்,
மேலாளர்,
தி.தி.தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

பிரதிகளுக்கு:
EDITOR,
"Sapthagiri"
T.T.D., Tirupati.


## உள்ளுறை

பக்கம்



## அட்டைப்பட விளக்கம்

முகப்பட்டை : ஸ்ரீ துர்க்கா - சித்திரம்: கே. ஜெகதீஷ்

முதல் உள்ளட்டை : ஸ்ரீ பொய்கையாழ்வார்.

2-வது உள்ளட்டை : ஸ்ரீ வேதாந்த தேசிகர்

பின்னட்டை : ஸ்ரீ சத்யநாராயண சுவாமி திருக்கோயில் அன்னவரம் (ஆ.பி.)

JAGADISH

# உங்களுடன்....

பொழுது விடிந்ததுமுதல் பொழுது சாயும் வரை அல்லது உடல் சோர்ந்துபோகும் வரை ஒருவன் உழைக்கின்றுன். மற்றொருவன் காலை பத்து மணி முதல் மாலை ஐந்து மணி வரை என்று நேரம் போட்டு (பார்த்து)க்கொண்டு உழைக்கின்றுன். இன்னுமொருவனோ திருடுதல், கொள்ளையடித்தல் என்று பெருமை தராத ஓர் உழைப்பை மேற் கொள்கிறுன். இவ் உழைப்புக்களுக்கு அடிப்படை இலக்கு ஒரு சாண் வயிற்றினை நிரப்புவதுதான். வயிறு நிரம்பியவுடனேயே விலங்குபோல் உடனே மனிதன் தூங்கிவிடுவதில்லை. வயிற்றுப்பசி தீர்ந்தவுடன் மற் றைய புலன்களின் பசியைத் தீர்க்கவிரும்புகிறுன். அதனால் மகிழ்ச்சி, இன்பம் பெறுகின்றுன். ஆம் மகிழ்ச்சிதான் மனிதனது இறுதி உணர் வாக அமைகின்றது. மாடிக்குப் போக உதவிடும் ஏணியாக மட்டுமே வயிறு செயல்படுகிறது. ஆக, மனிதன் வயிற்றைவிட மனதிற்குத் தான் முதலிடம் தருகின்றுன். அம்மனத்திற்குத்தான் அவன் நாளும் உழைக்கின்றுன். உழைப்பின் வெற்றி தூக்கமல்ல; மனச்சந்தோஷம்தான்.

எது சந்தோஷம்? ஐம்புலன்களின் மூலம் பெறப்படும் இன்ப உணர்வுகள்தாம் சநதோஷமா? அந்த சந்தோஷத்தைப் பெறத்தான் இப்பிறவியை இம்மண்ணில் பெற்றோமா? அப்போது நமக்கும் பிற பிறவிகளுக்கும் உள்ள வேறுபாடு என்ன? புலனின்பம்தான் உண்மை என்றுல், நாம் ஏன் காட்டில் வாழாமல், வீடு கட்டி வாழுகின்றோம். அழகு பார்க்க ஆடை எதற்கு? மனைவி, குழந்தைகள் என்ற உறவுச் சூழலில் ஏன் வட்டமடிக்க வேண்டும். இந்தச் சந்தேக வினாக்களுக்கு, நமது ஒரு சிறிது சிந்தனையை சிதறவிட்டாலே போதும் விடை கிடைத்துவிடும். ஆம் மகிழ்ச்சி என்பது அறிவுபூர்வமாக, இதயபூர்வமாக அனுபவித்திடும் உணர்வாக அமைதல் வேண்டும். இவ் அனுபவத்தைப் பெறுவது எப்படி?

பெறுவது எப்படி என்பதைவிட தருவது யார் என்று சற்றே வினாவை விளக்கமாகக் கேட்டுக்கொண்டால், நமது குழப்பம் தெளிந்து விடும். தருவது இந்து சமயம். என்பதையும், பெறுவது அவை உணர்த் தும் செய்திகள்மூலம் என்பதையும் நடுவுநிலையில் நின்று யோசித்தாலே புரிந்துகொள்ளலாம். உலகச் சமயங்கள் யாவும் கூறிடும் கருத்துக்கள், கதைகள், நீதிகள் யாவற்றையும் ஒருங்கே சேர்த்தாலும் அவை இந்து சமயம் கூறிடும் செய்திகளுக்கு நிகராகா. ஏன் அருகு அணுகவும் முடியாது. மற்றையச் சமயங்களில் சமயப் பண்டிகைகள் விரல்விட்டு எண்ணக்கூடிய அளவில் அமைந்திட்டபோது, இந்து சமயத்தில் மட் டும் இத்தனைப் பண்டிகைகள் கொண்டாடுவதற்குக் காரணம் என்ன? என்பதை சற்றே நினைத்துப் பார்த்திடல் வேண்டும்.

உயிர்ப்பிறவிகளில் தனித்தும், உயர்ந்தும், சிறந்தும் விளங்குவது மானிடப்பிறவி. இறை உணர்வுடன் இரண்டறக் கலந்திட வழிவகுப்பது இந்த மனிதப்பிறவி. அத்தகுப்பிறவி புனிதமானதாகவும் சீரியதாகவும் விளங்கவேண்டும் என்பதே இந்து சமயத்தின் ஆசையாகும். பிறவியின் பயனான இறைவனிடம் மனிதனை அடையச் செய்வதே இந்து சமயத்தின் அடிப்படைக் குறிக்கோளுமாகும். தன் ஆசையும், குறிக்கோளும் எந்த வகையிலும் தோல்வியைத் தழுவக்கூடாது என்பதற்காகத்தான் இந்து சமயம் மனிதனை மேம்படுத்தும் முகத்தான் இப்பண்டி களை நமக்குத் தந்துள்ளது. இவ்வகையில் இம்மாதம் கொண்டாடப்பெறுவது நவராத்திரி விழாவும், தீபாவளிப் பண்டிகையுமாகும். உயர்ந்த அறிவின் சிறப்பும், அவ் அறிவால் பெறப்படும் செல்வமும், அவ் அறிவும் செல்வமும் இணையுபோது பெறப்படும் வஞ்சமில்லா மனத்துணிவும் மனிதனிடம் அமைந்திட வேண்டும் என்ற அவாவினால், கலைமகளும், திருமகளும், மலைமகளும் நவராத்திரியில் தொழுப்பெறுகின்றனர். இன்றைய நாட்டு நடப்புக்குத் தேவையானது என்று கூறும் விதத்தில், பெண்மையைப் போற்ற வேண்டியதன் அவசியமும் அதனை இழிவு செய்யும்போது, அப்பெண்மை வீறுகொண்டு எழும்போது அதன் தாக்கத்தின் எழுச்சியும் 'துர்க்கா பூஜை' யின் போது நாம் நினைவு கொள்ள வேண்டிய கருத்துக்களாகும். அதேபோன்று 'பகவத்கீதை'யின் தம்பி என்று போற்றப்பெறும் தீபாவளிப் பண்டிகை, தீயோனான தன் தனையன் நரகாசுரனை இழந்திட்ட நாளை, இம் மண் மகிழ்ந்து கொண்டாடும் நினைவுநாளாக இறைவனிடம் கேட்ட பூமிதேவியின் பரந்த தியாக உள்ளத்தை, பரந்த மனப்பான்மையை, இன்றைய இந்தியாவின் எல்லாத் துறையினரும் களங்கமின்றிப் பின்பற்றினால் இன்றைய வன்முறை அரசியல், தேசத்துரோகம், .ஜாதிச் சண்டை போன்றவற்றிற்கு ஒரு முற்றுப்புள்ளியை வைத்துவிடலாம். ஆகவே தோன்றியிருக்கும் இந்த ஆபத்தான சூழ்நிலை, ஒரு கூட்டத்தோடு அழிய வேண்டுமென்றால், ஒரு காலக் கட்டதோடு மறைய வேண்டுமென்றால், எதிர்கால சமுதாயம் நம்பிக்கையோடு, அமைதியோடு வாழவேண்டுமென்றால் இன்றைய இந்திய சமுதாயம், தேசிய ஒருமைப்பாட்டு உணர்வினை தோற்றுவித்திடும் இதுபோன்ற விழாக்கள் அறிவித்திடும் கருத்துக்களை நடைமுறையில் தன் வாழ்நாளில் பின்பற்றுவது ஒன்றே சிறந்த வழியாகும, அதுவே நமக்குக் கிடைத்திடுட்ட ஒரு நல்வாய்ப்புமாகும். அதனை நழுவவிடாது நம்மை நாம் திருத்திக்கொள்வோமாக!



# செய்திச் சுருக்கம்

## ஆளவந்தார் ஜெயந்திவிழா

திருமலை திருப்பதி தேவஸ தானத்தாரின் ஆழ்வார் திவ யபபிரபந்தத் திட்டததுறையின சார்பில் திருப்பதி ஸ்ரீஅன் னமாசார்யா கலா மந்திரத் தில் , ஆளவந்தார் ஜெயநதி விழா அணமையில் வெகுச் சிறப்பாக கொண்டாப்பட்டது. திருப்பதி சின்ன ஜீயர் மடத் தின் ஆஸ்தான பண்டிதர்க ளால் நடைபெற்ற திவ்ய பிர பந்த கோஷ்டி நிகழசியைத தொடர்நது, தி.தி. தேவஸ தான நிதி ஆலோசகர மறறும் தலைமை கணக்கு அலுவலர திரு. குருமூர்த்தி அவர் கள் நிகழ்ச்சிக்குத் தலைமை வகிக்க, திரு. எம். கொண் டமாச்சார்யலு அவர்கள் ஆள வந்தார் பற்றிய ஓர் இனிய சொற்பொழிவாறறினார். பின னர் திரு. சக்ரவர்த்தி ரங் கராமானுஜம் அவரகள் 'ராமா யண தனிச்சுலோகி' பற்றி விரி வான சொற்பொழிவொனறு ஆற்றினார். திடடத்துறை யின் சிறப்பு அலுவலா டாக்டர் பொன். சௌரிராஜலு அவர்கள் துறையின் பலவேறு செயல் திட்டங்களை விளககி, விழா விற்கு வருகை புரிநதோரக்கு நன்றி நவின்ருர்.

## மற்றையச் செய்திகள்

திருப்பதியிலுளள அரசு ரூயா மருத்துவமனையின் குழந்தை கள் சிகிச்சைபபிரிவுக்கு ரூ. 1.70 இலட்சம் தி.தி. தேவஸ்தான மேலாண்மை வழங்க உளளது

* * *

நன்கொடையாளர் ஒருவர் ரூ. 50 இலட்சம் வழங்க முன்வந் துள்ளதை ஒட்டி திருமலையில் தரும சத்திரம் ஒன்று கட்டப்பட உள்ளது.

* * *

## திருமலையில்

ஆநதிர மாநில உயர்நீதிமன் றததின் தலைமை நீதிபதி திரு. பிரபாகரமூர்த்தி அவர்கள ஒரு நாள் பயணமாகத் திருமலைககு வருகை புரிநது இறைவனைத் தரிசித்தார்.

* * *

## திருப்பதியில்

திருப்பதி நகரத்தில அரசு மருததுவமனைககு அருகே முச் சநதி சாலையில் சுவாமி விவே கானநதரின திருவுருவசசிலை யினை ஹைதராபாத ஸ்ரீராம கிருஷண மடததின தலைவர சுவாமி ரஙகனானநதா அவர கள் அணமையில திறந்து வைத் தார். இது சம்பந்தமாக ஸ்ரீவேங்கடேஸ்வரா உயர்நிலை பள்ளித் திடலில ஏறபாடு செய் யப்பட்ட விழாவிற்கு அண் மையில கலைககப்பட்ட தி.தி. தேவஸதான அறங்காவலரக்கு ழுவின தலைவர திரு. பி. வெங் கடேஸவரலு, தி.தி. தேவஸ் தான செயலாடசித் தலைவர் திரு. என். ரமேஷ்குமார் ஐ.ஏ. எஸ். ஆகியோரும வருகைதந்து சிறப்புரையாறறினாரகள. இச சிலைத திறபபுவிழா ஏறபாட் டினை, தி.தி. தேவஸதானம ஸ்ரீராம கிருஷணமடம் மறறும திருப்பதி கலைக்குழு ஆகியோர் இணைந்து மேறகொண்டனர்.

* * *

## யாத்திரிக வனம்

திருமலைக்குச் செல்லும் மலைவழிச் சாலையில் ஐந்து



ஹெக்டர நிலப்பரப்பில மரங் களை வளர்த்திடும திட் டத்தினை அணமையில தி.தி. தேவஸ்தான செயலாடசித் தலைவர் திரு. என. ரமேஷ்கு மார அவரகள சில மரக்கனறு களை நட்டுத் துவககி வைத் தால் 'யாததிரிக வனம்' என்று அழைக்கபபடும இததிடடததில் பங்கேற்கும வகையில யாத்தி ரிகர்கள பலர சுமார 5000 செடிவகைகளை நடடனர்.

* * *

## கோயில் குடை

கோயிலக ளுக்குத் தேவையான கோயில் குடைகளை மலிவு விலையில் தி.தி. தேவஸதானம் வழங்கி வருவது தெரிந்ததே. தறபோது ஆறு மடிப்புக்களைக்கொணட கோயில்குடை ஒனறு ரூ. 1000/-க்கு வழஙகப்படடு வரு கினறது. முழு விவரங் களுக்கு "செயலாடசிததலைவர், தி.தி. தேவஸதானம், திருபபதி" எனும முகவரியுடன் ஆங்கி லத்தில தொடர்பு கொளளவும்.

* * *

# பணிப்பூவும் பொற்பூவும்

டாக்டர் இரா. அரங்கராஜன் - மதுரை.



"தெண்ணீரப பொன்னி திரைககையால் அடிவருடபபள ளிகொளளும" எனகிறபடியே போக மண்டபமான கோயி லில வீணையும் கையுமாய்ப பெரியபெருமாளுககு அநதரங்க ராய் அடிமைசெயத திருப பாணுழவாரை லோகஸாரங்க மஹாமுநிகள் அநுவரததிததும் ஆட செயதும ஸவரூபம நிறம பெறறு விளஙகுகிறுர.

"வேகவதயுததரே தீரே புணய கோடயாம ஹரிஸ ஸவயம வர தஸ ஸரவ பூதாநாம அத யாபி பரிதருசயதே" எனகிறப டியே தயாக மணடபமான பெரு மாளகோயிலில திருவாலவட்ட மும கையுமாயப பேரருளாள னுககு அநதரஙகராய அடிமை செய்து நினற திருக கசசிநமபியை வைதிகோததம ரான உடையவர அனுவரத திதது ஸவரூப லாபம பெறறு விளஙகினார.

"சிநதுபூ மகிழும திருவேஙக டம" எனகிறபடியே புஷபமண டபமான திருமலையில பணிப பூவும கையுமாயத திருவுளள மறியப பரிமாறுகையாலே திரு வேஙகடமுடையானுககு அநத ரஙகராயப போநத குறுமபறுத தநமபியை "துளஙகுநீணமுடி அரசரதம குரிசில் தொணடை மனனவன" எனகிறபடியே முடி சூடிய க்ஷதரியர்களின தலைவ னான தொணடைமனனவன அநுவரததித்துப பேறு பெறறு விளஙகினான.

தொணடைமனனவன பெற்ற பெருமையைத திருமஙகைமன னன அநுஸநதிததுப பெரிய பெருமாள திருவடிகளில ஆர்த் தராயச சரணம புகுநதார. திருமஙகைமனனன பாசுரததில குறுமபறுதத நமபியின பர பாபவமும் உளளடஙகியிருககி றது. அதனைப பெரியவாச சான பிளளை உணரநது வெளி யிடடிருககிறுர.

"துளங்கு நீணமுடி யரசரதம் குரிசில்
தொணடைமனனவன் திணடிறல்
ஒருவற்கு
உளஙகொள அனபினோடு இனனருள
சுரந்து
அஙகோடு நாழிகை ஏழுடன
இருபப
வளஙகொள மந்திரம மற்றவற கருளிச
செய்தவாறு அடியேன
அறிந்து உலக
மாநத பொனனடியே அடைந-
துயநதேன்
அணிபொழில திருவரஙகத-
தமமானே"

என்ற பாசுரத்தில் தொண்டை மன்னவனோடு திருவேஙகடமு டையான் கலந்து பரிமா றிய திறத்தையும் குருமபறுதத நம்பியின பததிமைத திறததை யும் திருமஙகைமனனன் ஒருசேர அநுஸந்தித்து இனியராகிறுர். இப்பாசுரததில பெரிய பெரு மாளை நோககி, "உன்னையல் லது அறியாத தொணடைமான சகரவரததிககு ஸவரூபஜஞா நததை உணடாக்கினாப்போலே, எனக்கும ஸவரூப ஜஞானததை உணடாகக வேணும்" எனறு விண்ணப்பித்து சரணம புகு கிறுர்.

வயலாலி மணவாளனிடம திருமணஙகொல்லையில் "நான கண்டுகொண்டேன நாராயணு எனனும் நாமம்" என்று திரு மநத்ரத்தை உபதேசிககப்பெறறு, திருககணணபுரததில ஸ்ரீசௌரி ராஜன திருமுன்பு "உற்ற தும உனனடியாரக்கு அடிமை" என்று திருமந்தராரத்ததை உளளபடியே அநுஸந்தித்திருந தார். ஆயினும் தமக்குப் பிறக கும் ஜ்ஞாநம் விச்வஸநீயமன்று எனறு காணும ஒருவர் இருக கக்கடவது எனபதாகத் திருவுள ளம் பற்றிய திருமஙகைமன்னன பெரியபெருமாளிடததில தமக்கு ஸ்வரூப ஜ்ஞானத்தைப் பிறப் பிக்கவேணுமென்று வேண்டுகி ருர்.

திருமலையில் திருவேஙகட முடையான் தொணடைமான சக்ரவர்ததியோடு ஒருநீராகப் பரிமாறினான. சகரவர்த் தியும் திருவேங்கடமுடையான் திருவிளங்கோயிலைப் பெருக்கி விமான கோபுராதி மண்டபங களை எழுபபித திருபபணிக ளைச செயதான். திரு வேங்கடமுடையான் அரசசாவ தார ஸமாதியையும் குலைத் துக்கொண்டு சக்ரவர்த்தி யோடு வார்த்தையாடி மகிழ்ந் தான. தொண்டைமானைப் பகையரசரகள் வளைத்துப் போர புரிநதபோது திருவேஙக டமுடையான் தன்னுடைய திரு வாழி திருச்சஙகுகளைப் பரிகர மாக்கி அனுபபினான. திவ்யாப ரணங்கள திவ்யாயுதஙகளாய்ப புருஷவேஷத்தை பரிகரஹித் துப் போர்ககளத்திற் புகுநது பகை வர்க்கஙகளை சின்னாபின னமாக்கிச சிதைததன. இவ் வாறு தன்னையழிய மாறியும தொண்டைமானுககுத துணை யாக இருநதான திருவேஙகட முடையான்.

தொணடைமானுககு ராஜயா திபதயததில் நசையறச செயது நலம தரும நன்மொழி களை உபதேசிதத வர லாற்றைத திருமஙகைமனனன திருவரஙகரிடததில விணணப் பிககிறுர. தொண்டைமா னுககு ஹிதம் அருளிச் செய் ததை "உளளங்கொள அன்பி னோடு இன்னருள் சுரந்து" என் கிறுர். தனபேறுகவே திரு வுளளததறக்ணடு முலைககடுப பாலே தரையிலே பீச்சுவா ரைப போலே சக்ரவர்ததி அரத் தியாதிருக்கவும தானே மேல் விழுநது ஹிததததை உபதேசித் தான திருவேஙகடமுடையான் எனகிறுர. மேலும் "அங்கு ஒரு நாழிகை(யில)" எனறு, ராஜ்ய பாரத்தோடு வறிதாகக் கழிந்து செலகிற காலத்தில சகரவர்த் திககு ஹிததததை உபதேசிததான் திருவேங்கடமுடையான எனகி ருர.

உபதேசிதத ஹிதங்களதாம் யாவை எனனில்;

"ஏழுடனிருப்பு வளங்கொள மந்திரம்"

எனகிறுர்.

ஏழு என்பது ஏழு நாழிகை யைக காட்டி அதனால் உப லக்ஷிககப்படும ஏழு வார்த தைகளைக குறிப்பதாகத் திரு வுளளம பறறுகிறுர பெரிய வாசசானபிளளை. அதா வது ஏழு அர்ததஙகளோடு பொருநதி யிருப்பதாய் வளப பததையுடைய பெரிய திருமந்தி ரததைச சக்ரவரததிககு அருளிச செயதான் திருவேங்கடமுடை யான. பெரிய திருமநதிரத துககு வளமாவது 'ஸகல பலப் ரதனான ஈசவரனைப்போலே எலலார பககலிலும ஸஞ்ச ரிககை' எனகிறுர பெரியவாச சான பிள்ளை ஐச்வர்ய கைவலய பகவலலாபஙகளோடு வாசியற எல்லாப பலன்களை யும அளிககவல்லது திருமந்த ரம எனகை. ஆயினும் ப்ரபநத னான சகரவர்ததிககு ஸ்வரூப ஜஞானத்தைப் பிறப்பித்து அக கரைப் படுத்துவதறகாகவே திருவேஙகடமுடையான உபதே சித்தான. ஸவரூப ஜ்ஞானப ரகாசததை உண்டாக்கும் ஏழு அர்த்தஙகள் யாவை எனனில்? (1) தேஹாத்மாபிமாந நிவ்ருததி (2) ஸ்வாதந்தர்ய நிவருத்தி (3) அந்ய சேஷதவ நிவருத்தி (4) ஸ்வயத்ந நிவருததி (5) அபந துஷ்ட பநதுதவ ப்ரதிபத்தி நிவ் ருததி (6) விஷய நிவருத்தி ஆகிய ஆறும (7) பாகவத சேஷதவம எனகிற ஒன்றும் சேரநது ஏழு அரததங்களா கும்.

மேற்குறிததவறறில் ஆறு வகை அரத்தங்களையும் கூரத தாழ்வான் திருக்குமாரரான பராசரபட்டர் அஷ்டசலோகி யில அருளிசசெய்தாரிறே. ஏழா வதான பாகவத சேஷதவம என கிற அரததம 'நம:' என்கிற பதத்தினால் கொளளப்பட்டிருக கிறது. அவ்வாறு கொள்ளப்

பட்டதற்கு ப்ரமாணம் திருமங்கைமன்னன் திருவாக்கேயாகும். "மற்றெல்லாம் பேசிலும் உறறதும் உன் அடியார்கககு அடிமை" என்றல்லவா அவர் அருளிசசெய திருப்பது.

இனி, திருவேங்கடமுடையான் தொண்டைமான் சகரவர்த்திக்கு மேலே குறிதத அரத்தங்கள் ஏழினையும் உபதேசித ததோடன்றி மேலும் ஓர உபகாரம் செய்தருளினான். அந்த உபகாரம் யாது? எனில;

பாகவத சேஷத்வத்தைச் சக்ரவரததிககுக் கேள்வியோடு போகாது அநுஷடானபர்யந்தமாகச செய்தருளினான.

பாகவத சேஷத்வம சகரவர்த்தியானவனுக்கு எவ்வாறு ஏற்பட்டது? பாசுரததில, "வளங் கொள் மந்திரம் மற்று" என்பதைப் பெரியவாசசானபிள்ளை 'மநதிரமும் மறறும்' எனறு எண்ணும்மை கொடுதது விரிததுக கொணடார். மநதிரம எனபது அதன் பொருளைக் காட்டும; மற்றும எனபது பாகவத சேஷதவததைக் காடடும. 'மறறும அருளிசசெயதவாறு' என்பதில பாகவதசேஷத்வததைச செயத ப்ரகாரததைக கருதுகிறார. 'மந்திரம அருளி மறறும செய்தவாறு' எனறு பதங்களை அந்வயிதது, "குறுமபறுதத நமபியோடே சேரதது விடடபடியைச சொல்லுகிறது" என்றருளிசசெயவர் பெரியவாச்சானபிளளை. குறுமபறுத்த நமபியோடே சேரததிடட செயதியைத் திருமலை ஒழுகு எனகிற நூல விரிவாகக் கூறுகிறது.

திருமலைக்கு வடகிழக்கில் ஒரு யோஜனை தூரததில 'குருவை' என்னும கிராமததில் நிதயவாஸியாயத திருவேஙகடமுடையான திருவடிகளில பேரனபு பூண்டு பரம வைஷ்ணவனாய் குயவர் குலத்தில உதிதத ஒரு பாகவதர தமது சரீர ஜீவனததுக்கு உசிதமான மண் பாணடஙகளைச் செயதபினபு தம பக்தியாலே கையிலுள்ள மணணை வழித்து நானகு புஷபஙகளைப பணணி 'வேங கடததுறைவாறகு நம' என்று சொல்லித திருவடிகளிலே மாநஸிகமாகச சேர்தது வணஙகி வநதார.

தொணடைமான சக்ரவரத்தியும ஹிதோபதேசஙகளைக கேடட மறுகணமே திருவேங் கடமுடையானுடைய பூவார் கழலகளில் தன் தகுதிக்கேற்ப ஸவரண புஷ்பங்களால் அரசிதது வழிபட்டான. மறுநாளும் அவவாறே செயயப் புக, தான ஸமர்ப்பிததிருநத பொறபூக்களின மேல மணணாலாகிய பணிபபூக்கள நிறைநதிருபபதைக் கணடு வியப்படைநதான. பணிபபூககளை ஸமர்பபிதத பகதரைக் காட்டவேணடும் என்று எமபெருமான திருவடிகளில மனறுடி வேணடினான மனனவன. திருவேங்கடமுடையான சோதிவாய திறநது, "வாராய மனனவனே! நமமுடைய அடியான தனனை ஒருவருக்கும் பிரகாசப்படுததவேணடாம், பரகாசபபடுததினால ப்ராணதயாகம் செய்வேன் எனறு த்ருடதரமான கொளகையுடையவன" என்று அருளிசசெயதான. ஆயினும சகரவர்த்தி நிரபநதமாக பனமுறை பரார்த்திததான.

திருவேங்கடமுடையானுமதனனுடைய பக்தனுக்குச சரமகாலம ஸமீபிததுளளதை அறிநது சக்ரவரத்தியைக குருவை எனறும் கிராமததில் நம்பி பக்கல் அனுப்பியருளினான். குருவை நம்பியை ஸேவிக்கவேணடும என்று ஆரத்தியுடன புறப் பட்ட சக்ரவரத்தியிடம், "நீ ஒருவன மட்டுமே அவரைக் காணச செலக" எனறு திருவேங்கடமுடையான் ஆணையிட்டான.

அவ்வாறே முடிமன்னவனான சக்ரவர்த்தி ராஜசின்னஙகளை எலலாம களைநது தான ஒருவனேயாய்ச் தனித்துச சென றான். குரவை சென்றடைநது ஆங்கே குரவைநமபியைக் கணகளாரக் கணடான. குரவைநமபி மணணை வழித்துப் பணிபபூக்களாக்கித திருவடிகளிலே ஸமரப்பிககத திருவேஙகடமுடையான நிலையாரநின்று அவறறை ஏற்றுக கொண்டான. சக்ரவர்த்தியும மெயசிலிரததுக கீழே விழுநது நமபியைத் தணடனிடடுக கிடநதான. உடனே சகரவரத்தியின குறும்புகள யாவும் அழிநதன. ஜாதி கரவம, விதயா கரவம, ஐசவரய கர்வஙகள அவனைவிட்டு ஒழிநதன.

தியான ஸமாதியிலிருந்து திருககண விழிதத குரவை நமபி அதிரசசியடைநதார. அரசனைக கணணுற்றார. திவய ஜஞானியாகையாலே அவனைச் சகரவர்ததி என்று அறிநது கொணடார். தமமுடைய ஏகாநதபகதியைத் திருவேங்கடமுடையான இபபடிப் பிரஸித்தமாககியதை நினைத்துக் கவலையுறறார. சகரவரததியும மெசசும்படியான பக்தியுடையவன எனற கர்வம் தம்மைப்பறறிக் கொளளுமோ எனறு அஞசினார். அபபோது ஒரு வாரததை எமபெருமானிடம விணணப்பிததார்.

"பதிவ்ரதையோடுண்டான ஏகாந்தததின் அநுபவததைத திரளிலே வெளியிடுவாரைப போலே, தானும் நானுமறிய அநுபவித்த இத்தை இங்ஙனே வெளியிடுவதே! திருவேஙகடமுடையான அலைவலையாகாதே!" (அலைவலை=வரமபு மீறிப்பேசுபவன ' பாரகக பெரிய. திரு. 4-3-5) எனறு விஞாணப்பித்தார. இவ்வார்ததையை அபபடியே பெரியவாச சான பிளளை பாசுர வயாகயானததில உதாஹரிததிருக்கிறுர.

பதிவ்ரதையான பதனியோடு ஏகாந்த சமயததில் ஸம்சலேஷ கால அநுபவத்தை பரத்தா பிற ரிடம் பதனிமுனபே வெளிபடுததினால் அவள அதைத தாங்குவாளோ? குரவை நமபியான பதிவ்ரவதையாலும தாஙகமுடியவிலலை. இனிமேல வாழவியலாது எனறு அறுதியிடடுத தனகையிலிருநத தடியால தலைமீது மோதிககொணடார. அவ்வளவில அவருடைய சரீரம சாய்ந்தது; அவருடைய ஜீவன் திருவேங்கடமுடையான திருவடிகளில பணிப்பூக்களோடு ஒரு பூவாய் மலரநது சேர்நதது!

திருவேஙகடமுடையான மறைநதருளினான. சகரவரததியின் முக்குறுமபுகளும அறுநது மறைநதன. குறுமபறுதத நமபியின் அடியவனாகத திருமபினான முடிமனனவன. அடியார்க்கு ஆடபடுத்திய வேஙகடவனைப போறறினான.

இவவரிய வரலாறறையே திருமஙகையாழவார் பெரிய பெருமாளிடததில விணணபபம செய்து சரண புகுநதான. குறுமபறுத்த நமபியின பெருமையுணர்ந்த எம்பெருமானார் திருமலைக்கு எழுந்தருளினபோது குரவை எனற கிராமத்திற்கு விஜயம செய்தார். அங்கே திருவேஙகடமுடையானைத திருவாபரணம களைந்த திருமேனியோடும் அருகில் குறும்பறுத்த நம்பியோடும் ஏறியருளச் செய்து திருப்ரதிஷ்டை பணணுவித்துக் கோயிலும உணடாக்கி நிதயாராதனமும செய்விததார.



# இராமேஸ்வரம் ஆலயத்தைச்சுற்றியுள்ள தீர்த்தங்கள்

1. மகாலட்சுமி தீர்ததம்
2. சாவிததிரி தீர்ததம
3. காயததிரி தீரத்தம்
4. சரஸ்வதி தீரத்தம
5. சேதுமாதவ தீர்ததம்
6. கந்தமாதன தீர்ததம
7. கவாட்ச தீரத்தம
8. கபவ தீர்ததம்
9. நள தீரத்தம்
10. நீலதீரததம
11. சஙகு தீரததம
12. சகர தீரததம
13. பிரம்ஹ ஹத்திவிமோசன தீர்ததம்
14. சூரய தீரததம
15. சநதிர தீரததம
16. கங்கா தீரத்தம
17. யமுனா தீரததம
18. கயா தீரததம
19. சிவ தீரததம
20. சதயாமிருத்த தீர்ததம
21. சரவ தீரததம
22. கோடி தீரததம

தொகுத்தவர · மு. கோமதி - முகலூர்.

# மகா விஷ்ணுவின் சில திருநாமங்கள்

மகா விஷணுவின திருநாமஙகள் 16 பெயர்களில அழைககலாம. எவவெப்போது யாரை நினைததுக காரியமாறறவேண்டும என்பதை நாம் தெரிநது கொளளவேணடும. அவை

| | | | |
|---|---|---|---|
| 1. | மருநது உட்கொள்ளும போது | - | விஷணு |
| 2 | உணவு உடகொளளும போது | - | ஜனாரததனன |
| 3. | படுககச செலலும் போது | - | பதமநாபன |
| 4. | திருமணததின் போது | - | பிரஜாபதி |
| 5 | யுததம செயயும் போது | - | சகரதாரி |
| 6. | வெளியில கிளமபும போது | - | திரிவிக்ரமன |
| 7. | நணபரகளைச சந்திககும போது | - | ஸ்ரீதரன |
| 8. | கெட்ட கனவு கணடால | - | கோவிநதன |
| 9. | கஷ்டம வரும போது | - | மதுசூதனன |
| 10. | காடுகளில செலலும போது | - | நரசிமமன |
| 11. | நெருபபால துனபம வருமபோது | - | ஸ்ரீமகாவிஷ்ணு |
| 12. | தணணீரால துனபம ஏறபடடால | - | ஸ்ரீவராகன |
| 13. | மலையின மீது ஏறும போது | - | ஸ்ரீராமன |
| 14. | நடககும் போது | - | வாமனன |
| 15. | இறககும தருவாயில | - | நாராயணன |
| 16. | எலலாச சமயஙகளிலும | - | மாதவன |

தொகுத்தவர : மு. கோமதி - புத்தூர்.

# பகவத் கீதை

## பத்தாம் அத்தியாயம்

## விபூதி யோகம்

உமாபரியன

கண்ணன் கூறுவது :

பூய ஏவ மஹாபாஹோ ச்ருணு
மே பரமம் வச: ।
யத்தே அஹம் ப்ரீயமாணாய
வக்ஷ்யாமி ஹிதகாம்யயா ।। (1)

"அகன்ற தோள்கள் உடையவனே! மேன்மையைத தரும் என் அறிவுரைகளை மறுபடியும கேட்பாயாக! கேள்விகளைக் கேடபதில் ஆர்வம் கொணடுளள உனது நலம கருதியே உனககு நான் கூறுகின்றேன."

[பகவத விபூதி என்பது 'இறை உணமை' 'இறையாற்றல' 'இறைமேன்மை' எனறு பொருளகொளளலாம். முனபு கூறிய சில இறை உண்மைகளை மறுபடியும் இவ் அததியாயத்தில் வலியுறுத்தும் வகையில் கூறப்படுகிறது. கேள்வியின தன்மையைப்பொறுத்து, கேள்வி கேட்பவரின் பெருமை பேசப்பெறும். உண்மையான தேர்ந்த அறிவுள்ள ஆசிரியன எதிர்பார்ப்பது தன் மாணவனிடமிருநது தேரநத கேள்விகளைத்தான. தூர் வார வாரத்தான ஊறறுநீர் பெருகும. மாணவனின கேள்விகளும, ஆசிரியரின பதிலகளும்தான் அறிவின வளர்சசிக்கு அடிபபடையாகும். இநத அறிவின் விளக்கங்களால் மற்றைய மாணவர்களும் பயனுறுவர். இதனைத்தான் ஒரு நலலாசிரியர் எதிரபார்ப்பார. அநத உணர வில்தான் ஆசிரியனான கண்ணன் தன் மாணவனான அர்சசுனனிடம் அதிகமான சநதேகங்களை எதிரநோக்குகின்றான். அவன வழி, இநத சமுதாயத்திற்கு வழிகாட்டுகின்றான் நம கீதாசார்யன்.]

ந மே விது: ஸுரகணா
ப்ரபவம் ந மஹர்ஷய: ।
அஹமாதிர்ஹி தேவானாம்
மஹர்ஷீணாம் ச ஸர்வச: ।। (2)

"வானுலகில வாழும தேவரகளும், மாமுனிவர்களும் என ஆதியை உணரமாட்டார்கள. ஏனெனில அந்த தேவர்களும், முனிவர்களும் தோனறிட நான தான முதல காரணமாக விளங்குகின்றேன்."

[இங்கு இறைவனின் ஆதி அநதம் இல்லாத தனமை புழப்படுகிறது. புல பூணடு முதல் தேவர்கள வரை யாவும் அவனிடமிருநது அவன இச்சையிலிருந்து தோனறியவை தாம். தன குழநதையின் பிறப்பை ஒரு தாய அறிவாள். ஆனால் குழந்தைக்குத தன் தாயின் பிறப்புத் தெரியாது. அதுபோல தோன்றிய தங்கள் தோற்றத்தைத் தெரிந்து கொள்ள முடியாது.]

யோ மாமஜமனாதிம் ச வேத்தி
லோக மஹேச்வரம் ।
அஸம்மூட: ஸ மர்த்யேஷு
ஸர்வபாபை: ப்ரமுச்யதே ।। (3)

"யார் என்னை ஆதி இல்லாதவன் எனறும், பிறப்பு, பிறப்பு



இல்லாதவன் என்றும், உலக உயிர்களுக்குத் தலைவன் என்றும் உணர்கின்றனோ அவன் மனமயக்கத்திலிருந்து விடுபட்டவனாவான்; மேலும் பாவங்களின்றும் விடுபடுவான்."

[உலகில் ஒன்றின் அழிவிலிருந்துதான் மற்றொன்று தோன்றுகின்றது. விதை அழியும் போதுதான் அது மரமாகின்றது. ஆனால் இறைவனோ அழிவில்லாதவன்; பிறப்பு இறப்பு அற்றவன். நகரும், நகரா உயிர்கள் யாவும் அவ்இறைவனிடமிருந்துதான் தோன்றின. அழியும் உயிர்களாகும் என்று தெரிந்த மானுடம் அழியா அப்பரம்பொருளை அறிந்து கொண்டால், இறைவனின் மேன்மை, ஆற்றல், தன்மை புரியவரும். இதை மனிதன் தன் மெய்யுணர்வால மட்டும் புரிநது கொளள முடியும். அப்போதுதான் அவன மயக்க அறிவிலிருந்து விடுபட்டவனாகின்றான். இறுதியில் அவ் இறை உணர்வைப்பெற்று, அவ் இறைவனையே காணப பெறும் பேறு பெறுகின்றான. அந்தக்கணமே, அவன் பாவங்களிலிருந்து விடுபடுகினறான்.]

புத்திர்ஞானமஸம்மோஹ: க்ஷமா
ஸத்யம் தம: சம: ।
ஸுகம் து:கம பவோ அபாவோ
பயம் சாபயமேவ ச ।। (4)

அஹிம்ஸா ஸமதா துஷ்டிஸ்தபோ
தானம் யசோ அயச: ।
பவந்தி பாவா பூதானாம் மத்த:
ஏவ ப்ருதக்விதா: ।। (5)

"அறிவு, பேரறிவு மனக்குழப்பமின்மை, பொறுமை, சததியம, அடக்கம், அமைதி, இனபம், பிறபபு, இறப்பு, அச்சம, அச்சமினமை, அஹிம்சை, மனசமநிலை, மனநிறைவு, தவம், தானம், புகழ்ச்சி, இகழ்ச்சி ஆகிய பலவிதமான குணங்கள் உயிர்களுக்கு என்னிடமிருந்து தான் உண்டாகின்றன."

[இவ்விரண்டு செய்யுள்களிலும் மனிதனிடம் விளங்குகினற பலவேறு குண உணர்வுகள கூறபபடுகின்றன. மனிதனின் அறிவுநிலை, உணர்வுநிலை ஏறப இககுணஙகள் அவனிடம் பரநது விளங்குகின்றன. ஆம் மனிதனின் வினைகளுக்கு ஏறப இவ்வுணரவுகள் அவனிடம வெளிப்படுகின்றன. இவ்வெளிப்பாடு இறைவனால் அளிககப்படுகினறது.]

மஹர்ஷய: ஸப்த பூர்வே
சத்வாரோ மனவஸ்ததா ।
மத்பாவா மானஸா ஜாதா யேஷாம்:
லோக இமா: ப்ரஜா: ।। (6)

"ஏழு மகரிஷிகளும் முன்பிருந்த மனுக்கள நாலவரும் என ஆற றலோடு என மனதில் தோன்றியவர்களாவர. உலகிலுள்ள உயிர்கள் யாவும் அவர்களிடமிருந்தே வந்தவையாகும்."

[ஸர்வேஸ்வரனாகிய அப்பரமனின் மீது கொணட தீவிர ஞான பகதியின் காரணமாக அப்பரமனின தன்மையை ஏழு மாமுனிவர்களும், பதினானகு மனுககளில முக்யமான நான்கு மனுககளும் பெறறனர. ஆகவே அவர்கள் அப்பரம்பொருளின் இதயததிலிருநது - மனததிலிருநது அறிவிலிருந்து, உணரவிலிருந்து தோனறியவர்களாவர். அதனால் அவர்கள் முறையே ஞானத்தையும், ஆனந்தத்தையும் இந்த உலகில் பரப்பினார்கள. ஆம் அவ் உயிர்களின பிறப்பும், வளர்ப்பும் அவர்களால் புகுத்தப்பட்டன. பிருகு, மரீசி, அத்ரி புலகர், அங்கிரஸ், கிரது, புலஸ்தியர் ஆகியோர் ஏழு மாமுனிவர்களாவர். சுவாரோசிஷர், சுவாயம்புவர், ரைவதர், உத்தமர் ஆகியோர் நான்கு முக்கிய மனுக்களாவர்.]

ஏதாம் விபூதிம் யோகம் ச மம யோ
வேத்தி தத்வத: ।
ஸோ அவிகம்பேன யோகேன
யுஜ்யதே நாத்ர ஸம்சய: ।। (7)

"என்னுடைய இந்த பெருஞ் சிறப்புக்களையும், யோகத்தையும் (என் திருக்குணங்களையும்) உள்ளதை உள்ளபடி அறிபவன், சலனமற்ற யோக நிலையை அடையப்பெறுவான். இதில் சிறிதும ஐயமில்லை."

[உலக உயிர்களின் தோற்றத்திற்கும், இயல்புக்கும் அவ் இறைவனே மூல காரணமாவதால் அவ் இறைக்குணங்களே அவனது சிறபபுக்களாகப் பேசபபெறுகின்றன. அத்தகு சிறப்பினை அறிந்தோர - அவன் பெருமையை உணர்ந்தோர எந்தவிதமான சநதேகத்திற்கும் இடம் கொடுககாத, குழப்பங்களுக்கு உடபடாத வகையில் திகழ்ந்து தளராத பக்தியுடன் உறுதியுடன் விளஙகுவர.]

அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ மத்த:
ஸர்வம ப்ரவர்த்ததே ।
இசி மச்வா பஜந்தே மாம் புதா
பாவஸமன்விதா: ।। (8)

"நானே எல்லாவற்றிறகும பிறப்பிடமாவேன். இவ்வுலகம் முதற் கொண்டு எலலாம் எனனிடமிருந்தே பரந்து விளங்குகின்றன. இந்த உணமையை அறியும்படியான ஞானிகள் என்னையே பக்தி உணரவுடன் வழிபடுகின்றனர்."

[எவ்வாறு தாவரங்களுக்குப் பூமியானது ஆதாரமாக இருக்

கின்றது என்பதை அறிந்த குடியானவன் அந்நிலத்தின்மீது எருவிடுதல், பண்படுத்துதல் போன்ற செய்கைகளின் மூலம் அதிக ஈடுபாடு கொள்கின்றனோ, ஞானியானவன இந்த உலக இயக்கத்திற்கு மூலகாரணன அவ் இறைவனே என்று அறிந்து காமம், கோபம், பொறாமை, மயக்கம் போன்ற வற்றை விடுத்து, பக்திமூலம் அப்பரமனையே நாளும் நாடுகின்றான.]

மச்சித்தா மத்கதப்ராணா
போதயந்த: பரஸ்பரம் ।
கதயந்தஸ்ச மாம் நித்யம்
துஷ்யந்தி சரமந்தி ச ।। (9)

"அறிவை எனபால் வைத்து, உயிரை எனக்குரியதாக்கி, யாவரும் என் இயல்பை விளக்கிக் கொண்டு, எங்கும் எல்லோரும என்னையே புகழந்து கூறியும், மனநிறைவுடனும், மகிழ்ச்சியுடனும (ஞானிகள்) விளங்குவார்கள."

[விருமபியதைக் கொணர்ந்து தரும், தனக்கு எப்போதும பாதுகாப்புத்தரும் தநதையின் பால ஒரு குழந்தைக்கு எவவாறு ஒரு பிடிபபும, பாசமும, அனபும இருக்குமோ, அதே போனறு, தன் பிறவிக்கும, முக்திக்கும் மூலகாரணன் அவ இறைவன என்று அறிநதிடும பக்தன, அவ இறைவனுக்கே தன் அறிவையும், தன உணர்வுகளையும் இறுதியில் தன் உயிரையும அர்ப்பணித்துவிடுகிறான். இறைவன் பறறிய நினைப்பே, பேச்சே, செயலே பக்தனது அன்றாட வாழ்வியலாக அமைந்துவிடுகினறன.]

தேஷாம் ஸததயுக்தானாம் பஜதாம ப்ரீதிபூர்வகம் ।
ததாமி புத்தியோகம் தம்யேன
மாமுபயாந்தி தே ।। (10)

"என்றென்றும் யோக முயற்சியை மேற்கொண்டு பக்தியுடன் என்னை வணஙகுபவரகளுக்கு (நான்) புத்தி யோகத்தை அளிக்கின்றேன். அதனால அவர்கள் என்னையே வந்தடைகிறார்கள்."

[எங்கும் எதிலும் இறை உணமையை அறிநது கொண்டவர்கள் அவ்இறைவனை நினைப்பதிலேயே, அவ்வுணமையைப் பிறரசொல்லக்கேட்பதிலேயே, அவன்தம் பெருமையைப் பிறருக்கு உபதேசிப்பதாலேயே மகிழவு பெருகின்றனர். அதுவே ஒரு யோகமாக அவர்களுக்கு அமைந்து விடுகின்றது. அதுபோது இறைவன அவர்களுடைய அறிவை மெய்யறிவு எனும் ஞான ஒளியுடன் ஒளிரச்செய்கின்றான. அதுபோது முக்தி எனும பேரின்பம அவர்களுக்கு ஒரு எளிதான இலட்சியமாக அமைந்துவிடுகினறது.]

தேஷாமேவாநுகம் பார்த்த
மஹமக்ஞானஜம் தம: ।
நாசயாம்யாத்ம பாவஸ்தோ
ஞானதீபேன பாஸ்வதா ।। (11)

"நான அவர்களபால செலுத்திடும அருளெனும கருணை கொண்டு, அவர்களது உள்ளத்தில புகுந்து மெயஞ்ஞான சுடர் ஒளியால, அறியாமையால் அவர்களுக்குள் ஏற்படும் இருட்டினை விலக்கி விடுகிறேன்."

[ஜீவாத்மாவின் மனபரிபக்குவத்திற்கே இறைவன் இவ் வுலகைப் படைத்துள்ளான். பேரின்பமான முத்திநிலையின் வெற்றி, பிறக்கும்போது மெய் யுணர்வுடன் பிறத்தல் அல்ல. பிறந்தபின்பு மனதை, அறிவை, உணர்வுகளை இறைநிலைக்கு மேம்படுத்துவதுதான் மனிதனின் சாதனையாகும். மனிதன் ஓர் அடி முன்வந்து கை நீட்டினால், அவனைக் காப்பாற்ற இறைவன் பத்தடி கீழிறங்கி தன் அபயக்கரங்களை நீட்டுவான். இதுதான் அவதாரத்தின நோக்கமாகும். இறைவன் நம் இதயமாகிய கோயிலில் வந்தமர வேண்டுமானால், முதலில நம் இதயம் தூய்மையானதாக அமைதல் அவசியமாகும். ஞான ஒளி நம் உள்ளத்தில் எனறென்றும் ஒளிர வேண்டுமானால, நம்மிடம் பக்தி எனும் எண்ணெயும் இறைமனனம் எனும் தூயக்காற்றும், தேர்ந்த சிந்தனை எனும் திரியும், மயக்கமறற உள்ளமெனும் அகலும் நமமிடம் இருத்தல வேண்டும். அப்போதுதான் அந்த ஞானத் தீயில அந்தக் கடவுளைக் காண முடியும்.]

(தொடரும்)



## அறிவிப்பு

கோயில்களுக்குத் தேவையான கல் மறறும பஞ்சலோக கடவுளர சிலைகளை அக்கோயிலகளுக்குரிய அரசு அறநிலையத்துறை உதவி ஆணையரகளின் பரிந்துரையின் பேரில் தயாரிபபுச செலவில் 50 சதவிகித தளளுபடி விலையில தி.தி. தேவஸ்தானம வழங்கி வருவது தெரிநததே. தறபோது, தயாரிப்பு செலவுகளை மனதிறகொண்டு, மேறபடி சிலைகள் 60 சதவிகித தயாரிபபு செலவினைப் பெறறுக்கொணடு வழங்குவதென்று தி.தி. தேவஸ்தான மேலாணமை முடிவு செய்துள்ளது. இமமாறறம உடனடியாக அமுலாக்கபபட்டுள்ளது.

# வைணவ வழக்குச்சொற்களும் பொருள்களும்

டாக்டர். மா. வரதராஜன் - திருப்பதி.

## கொ

| | |
|---|---|
| கொப்பூழ் | நாபி, தொப்புள், உந்தி |
| கொம்பத்து பருத்தி-யாக அங்காடி பாரித்தல் | செடியில் பருத்தி கொம்பாயிருக்கும் போதே புடவையானதாய் நினைத்து அதை விற்கக் கடைப் பரப்பி அளப்பது விலை பேசுவ தாகப்பாரித்தல் |
| கொம்பராவு நுண்-ணேரிடை | கொம்பு போலவும் பாம்பு போலவும் இருப்பதாய் அது தானும் நுண்ணியதாய் நேரிதான இடை. அதாவது வஞ்சிக் கொம்பிலும் அரவின் பணத்திலும் நுண்ணியதாய் நேரிதான இடை. |
| கொம்மை | திரட்சி; திணமை; பெருமை; கொங்கை. |
| கொய்தல் | பறித்தல் |
| கொய்ச்சகம் | கொய-கொய்தல், கொசுவு அழகுதல், கொய்சகம் |
| கொய்யடி நாரை | நாரை இனத்தில் ஒன்று. மெத்தென்ற அடியையுடைய நாரை. |
| கொயல்வாய மலர் | கொய்கை வாய்ந்த மலர்; வட்டமாய செவ்வியுடைய மாலை, குயல் என்று பாடமாகில் குவிந்த வாயையுடைய மலர் என்பர. |
| கொல்லணைவேல் | கொலையிலே அணைந்த வேல் |
| கொல்லாமாக்கோல் | கொல்லுவதற்குக் கருவியானது மட்டுமின்றி குதிரையை நடத்துவதற்கான முட்கோல் |
| கொல்லியம் பாவை | கொல்லிமலையிலே உள்ள பாவை பாவை - பெண் பிரதிமை; சித்திரத்தில் வரைந்து இருப்பது. |
| கொல்லைமை | வரம்பழித்த செயல் |
| கொல்லையரக்கி | வரம்பழித்த செயலை உடையவள். மரியாதை தப்பி நின்றவள்; சூர்ப்பணகை |
| கொல்லை வல்லேறு | வெளிநிலங்களிலிருந்து மீண்டு வருகிற வலியகாளை |
| கொல்லை விலங்கு | ஒருபொழுதும் பூசல் கண்டறியாமல் என்றும் கிளையிலே திரிந்து கொண்டு இருக்கும் குரங்கு |
| கொலைப்புணதலைக்-குன்றம் | கொலைத்தொழிலையும் புண் ஆராத் தலையையுமுடைய மலை போன்ற ஆனை. துரோட்டியிட்டுக் குத்துவதால் புண்ணும். காட்டு ஆனையாகையாலே ஆனைகளோடு பொருது புண்ணுயிருத்தல். |
| கொவ்வை வாய் மக-ளிர் | கோவைப்பழம் போல் இருக்கிற வாயையுடைய பெண்கள். |
| கொழுநன் | நாயகன் |
| கொழிக்கும் | கிளப்பும், தள்ளிக்கொண்டு வரும், அலை எறியும், அரிசியை முற்றத்தில் கிடடுக் கொழிப்பது, கல் முதலியவற்றைக் கிளப்புவது |
| கொள்கின்ற கோளி-ருள் | எங்கும் பரந்துள்ள கோட்பாட்டையுடைய இருள், கோட்பாடு - தன்மை, இயற்கை |
| கொளக | நிச்சயிக்க |
| கொள்கை | செருக்கு, கோட்பாடு, கொள்கலம், தன்மை |
| கொள்கை கொளாமை- | ஒப்புக்கொள்கையும் கை விடுகையும் |
| கொள் கொடையறுறு- | கொடுக்கல் வாங்கல் இல்லாமல் |
| கொள் கொம்பு | பற்றுக்கொம்பு, சுள்ளிக்கால் |
| கொள் கொம்பு பூடு-தல் | கொடியைச் சுற்றி அது படருவதற்கு ஊன்றப்படும் கொம்பு மறையும்படி கொடி தழைத்து மறைத்தல் |
| கொள்கைத்தே | நம்பலாமோ! கொள்கையுடைத்தோ! கொள்ளத்தக்கதோ! |
| கொள(ண்) மாட்டாது | கொள்ளமாட்டாமல் |
| கொள்ளிவட்டம் | குறைக்கொள்ளியைச் சுழற்றுவதில் தோன்றும் வட்டம் |
| கொள்ளைக் கொழு-மீன் | பெரிதாக வளர்ந்துள்ள மீன், கொள்ளை - பெரிது, அதிகம். |

கொள்ளையாகக் கிடைக்கிறது - அதிகமாகக் கிடைக்கிறது-பேசசு வழக்கு.

கொள்ளைச் சரக்கு - திருடினச சொதது

கொளுந்து விக்கை - நெருப்புபபறறுவிக்கை. பிடித்துக் கொளளுகை

கொளுவி - தொடுதது, மூட்டி, கோத்து

கொற்றப்புள் - ஜயசீலமான புள்; கருடன, கருடனைபபாரபபதே சுப சகுனமாய் வெறறிககு அறிகுறியாய் இருப்ப தால கருடனை ஜயசீலன எனபர.

கொறறம - வெற்றியும் வலியும

கொறறை - குறை

கொறுககோல் - கன்றுகளின முகத்தில கட்டும கோல், முளகுத்தின கோல

கொறுடு - கனனம

கொறறவன் - வெறறியுடையவன், ஸ்வாமி; அரசன

கொறறவை - துரககை.

கொறறி - துரககை; பசுவின இளஙகனறு

கொன்றைசசடையன - கொனறைபபூவைச சடையில தரித்த சிவன

கொன்னவில கூர-வேல - கொல-கொலை, அத்தை நவிலுகிற-பரிசயம் பண்ணுகிற கூரான வேல.

## கோ

கோககள - தலைவரகள

கோக்கை - தொடுககை; முறைப்படுததுகை. மணிககுள் நூலைபபுகுததி இணககை

கோகனகம் - தாமரை; கரும்பு

கோகனத்தவள் - பெரிய பிராட்டியார்.

கோகிலம் - பல்லி; துளை; குரங்கு

கோகு - அடைவுகேடு; முறைகெட்டு

கோகுகட்டு - ஆரவாரிக்கை

கோகு உகட்டுண்டு - அக்ரமமான ஆரவாரம் செய்து உகட்டு - தலைமண்டையிட்டு

கோட்டஙகை - குவிந்த அழகான கை

கோசரம் - விஷயம்

கோசிகம் - பட்டாடை, சாமவேதம்

கோட்டம் - கோணல; பகைமை; கோயில் பசுவின் கூட்டம்

கோட்டி - திரள்

கருக்கோட்டி - கர்ப்பஸ்தானம்

கோட்டிடை - எயிற்றிலே

கோட்டியரகோன - திருக்கோட்டியூருக்கு ராஜா

கோட்டிய வில் - வளைந்த வில்

கோட்டுககால் கட்டில் - கோடு-கொம்பு. யானைக்கொம பால் செயத கால்களையுடைய கட்டில

கோட்டுச்சி - சிகரத்தின நுனி

கோட்டுமுத்து - கோடு-கொமபு. யானையின் கொம் பிலிருநது பிறககும முதது

கோட்டை - மதிள. கோட்டையாவது வெளியிலுள்ளாரால் புகுரவும் முடியாததாய உளளே இருப்பவரால் புறப் படவும் முடியாமல புகுநத இடமும புறபபட்ட இடமும தெரியாதிருககுமதாகும.

கோடபாட்டுலகம - இடமுடைய விசாலமான உலகம்

கோட்பாடு - கட்டளைபபாடு; கொளகை

கோட்புகுகை - இளஞசெடிகள் வலிமை உடையதாகை. அதாவது மரம பூக்க ஆரமபிபபதைச சொலலுகிறது. வருடநதோறும பூபபதைச் சொல் லுவதில கருதது இல்லை.

கோள சொலலுதல - காட்டிககொடுததல.

கோடரம - குதிரை; சோலை; குரங்கு; மயிற சாநது; மரசசெறிவு.

கோடற்கு - கொளவதறகு

கோடார(ல)ம - பிறைபோலே வளைநதிருககிற ஹாரம். முத்தினகோள் போலே இருககிற ஹாரம. கோள-கிரகம. அத்தால பிறைசசநதிரன போலே வளைநதிருக்கிற குறுகின ஆரம; ஓர ஆபரணம்.

கோடிகம - பூநதட்டு; துகில்

கோடி - புதிது; புதிய ஆடை

கோடிகக - அலங்கரிகக

கோடிய மனம் - கோடுதல் விலஙகுதலாய் எலலா விஷயத்திலும் விலஙகிய மனம். அதாவது ஒருகாலும் ஈரமில்லாத நெஞசு.

கோடி எடுக்கிறேன் - அநேகம் இடம் சொல்லுகிறேன

கோடியைக் காணி-யர்க்குதல் - கோடி திரவியத்தை இட்டு ஒரு இரத்தினம் வாங்கி மார்பிலே

வைத்து அநுபவிக்கை.

கோடு நீடுகையன் - எல்லாக் காலமும் திருக்கைக்கு அடையாளமாம்படி அத்தைப் பிரியாத சங்கை உடையவன். கோடு-வளைவு அத்தால் சங்கைச் சொன்னபடி.

கோடை தடடி உலரு-தல - வெயயில்

கோணம் - குதிரை; மூக்கு; வாள்

கோணுகணை - கோள் நாகணை, கோள் - மிடுக்கு கோணுகமே அணை. படுக்கை.

கோணை - மிறுக்கு; வலிமை; கொடுமை

கோத்தல - சேர்த்தல்

கோததவன தளை - காலில் பூட்டிய வலிமையான விலங்கு

கோத்துக்குழைத்தல - கூடிக்கூடிக்கலநது இருததல்

கோததிரம் - குலம; பேர; மலை

கோத்ரஸுூதரபபட - வெறும் பெயர மட்டுமலலாமல கோதரஸுூத்ரங்கள் தெரியுமபடி. குலம கோத்ரம் தெரியுமபடி

கோது - சக்கை

கோதன - மகிழ்ச்சிக்கு விஷயமானவன. கோதுகலம என்பது கோதனா யிற்று

கோதாய - மாலை போன்றவளே

கோதி - பொறுக்கி

கோதில் செங்கோல-குடைமனனர் - ஒருவராலும பங்கம பண்ண முடியாதபடியான செங்கோலை யுடைய மன்னர்.

கோதில் பட்டர்பிரான் - குற்றமற்ற பெரியாழ்வார்

கோதிலடியார - வேறு பயனை விருமபாது எம்பெருமான் ஒருவனையே பயனாகக் கருதுபவர்கள்; அநந்ய பரயோஜநர் என்றபடி

கோதில் வண்புகழ் - குற்றமற்ற கல்யாண குணங்கள். குணங்களுக்குக் கோதில்லைமை யாவது - ஒரு குணத்தை நினைத்தால் வேறு குணத்தில் போகாதபடி கால்கட்டுகை

கோதை - சூடிக்கொடுத்தவள்; பெரியாழ்வார் பெண்பிள்ளையான ஆண்டாள்; பெண்கள் தலைமயிர்; பூமாலை.

கோப்பு - வியப்பு

கோபபின்னுமானான் - பின்னும்-பிறகும, குறிப்பு - திருவுள் குறிப்பு எத்தில் கோவானான் - ஸ்வாமியானான். அவதாரம் முடிந்த பின்னும் தன் சங்கலபத்தால் விரோதியை அழிக்கும் தன்மையனாய் மேன்மைத்தன்மை தோறற இருந்தான் என்றபடி.

கோபபுக்குலைந்து - கட்டுக்குலைந்து

கோப்புடைய சீரிய-சிங்காதனம் - வகுப்புண்ட அழகான சிங்காதனம். கோபபு-வகுபபு. விசித்திரமான ஸந்நிவேசம். எம்பெருமானுடைய சிமமாசனத்திற்கு எட்டுக்கால்கள. (சித சித்துக்கள் 2, விண்ணுடு மணணுடு 2, தர்ம ஞானங்கள 2, அதர்மம அஜஞானங்கள் 2; ஆக எட்டு.)

கோபால கோளரி - இடையர்களுக்கு அடங்காமல் மிடுககையுடைய சிமமம் போலே செருககி மேனாணிதது இருக்கும கணணன, கோள் - மிடுக்கு, அரிசிமமம். கோபாலனான சிமமம் கோபாலசிம்மம்.

கோபால பிளளைகள - இடைபபிளளைகள்

கோபுரம - தலை வாசல

கோமளம - இளமை; அழகு; மெனமை, மாணிக்கம

கோமுறை - அரசரகள் பண்ணும மிறுக்கு; அரசாட்சி

கோமின - கோக்கை சேரக்கையாய் அநுவிக்கை; அநுபவியுங்கோள்

கோமுததவன - கோமுறறவனுக்கு கொசசை. அரசர்.

கோயில - ஸ்ரீரங்கம்.

கோயிற கட்டணம - அந்தப்புரம்.

கோயில கூழைத்தனம - கட்டுப்பாடு இல்லாத செயல். நியதி இல்லாத செயல்; கோ- அரசன் இல்லாமையால் வந்த கூழைத்தனம்.

கோயில கொணடான் - இருப்பிடமாகக் கொண்டான்

கோயில கொள் தெய்வம் - திருவடி, திருவனந்தாழ்வான், சேனை முதலியார் தொடக்கமான பரிவாரங்கள்

கோயிலாழ்வார் - கோயிலாகிய ஆழ்வார். ஸ்ரீரங்க விமானம். ஸ்ரீரங்கத்தில் நம்பெருமாள் கோயிலாழ்வாரில் நின்றும் புறப்படுகிறுர் என்று சொல்லுவர். வீடுகளில் உள்ள பூஜைப் பெட்டிக்கும் பேர்.

கோயிறசாந்து - உயரநத சநதனம; கோ எனறு ராஜாவாய அவனுககுத தகுந்த உயரநத சந்தனம

கோயில் சீயததல் - கோயிலிலே கைஙகரயம செயதல; திருவலகு இட்டுப பெருககுதல, சுத தம செயதல

கோயில திருவாய-மொழி - கோயிலான ஸ்ரீரஙகததைப பறறி நமமாழவார பாடிய கஙகுலும பகலும எனற பதிகம். தின மும சொலல வேணடிய பாசு ரஙகள அடஙகிய நிதயாநுஸந தான எனற தொகுபபுககும பெயர. இதில திருவாயமொழி முதல பத தில முதல இரணடு பதிகங களும மறற பததுக்களிலிருநது ஒவவொனறுமாகி கடைசி பத்தாம பததில 9, 10 பதிகஙகள சேரநத தாகும.

கோயினமை - அநீதி; வேணடபபாடு அதா வது பெருமை; கைஙகரயமாகிற புருஷார்ததம; ஆராயசசி இலலாத செயல

கோரவை - கோவை

கோரணடம - குறிஞசி

கோரமபு - தீமபு

கோல கழிநதான-பூழை - கோல கழிநத பூழை அதாவது கோலிலலாக கரணடி உபயோக மறறது.

கோல்வளை - மழுஙகல, வளை

கோலவாசி - நிலம அளக்கிற கோலவாசி

கோல் விழுக்காடு - கோலின் விழுக்காடு, எண்ணியபடி நடபபது. கோல எனபதை அள வுகோலாகக் கொண்டு பாகப்பிரிவி னையில முன்பே ஒருவன விரும பின நிலததில அளக்கும கோல, அவனது பாகத்தைச் சேரந்ததா கக் காணபிக்கும முறையில தானே வந்து விழுதலையும் சொல்லுவர; தறசெயல.

கோலமாக ஆடுகின-றோம - அழகாக ஆடுகினறோம

கோல வராகம - அழகான வடிவையுடைய வராகம்

கோலுகை - முயலுகை

கோவல்நகர - திருக்கோவலூர் எனனும் திவய தேசம்

கோவலபபட்டம - இடையர் எனனும பட்டம

கோவிநதஸவாமி - திருமலையில ஒரு பக்தர். திரு மங்கையாழவாருககு முற்பட்டவர். இவர மோக்ஷததிறகாகவுமலலாமல உலக இனபஙகளில அருசி பிறகக வுமலலாமல, கேவலம கணணன பாலயத்தில செயத திருவிளையா டல்களையும் குரவை கூததையும் காண ஆசைபபட்டு தவம செயது கணணன இவர உளளததில உலக இனப ருசியறிநது அதை அநு பவிதது பினனர வீடு பேறு எய் துமபடி செய்த பெரிய திருமொழி (5.8.5) பாசுர வரலாறு நினைக்கத தககது.

கோவிநாயகன - கோபிநாயகன; கோவிலலாத நாய கன.

கோவியன - யமன

கோவை - மாலை; சேரததி

கோழி - உறையூர, ஒரு திவயதேசம

கோழமபம - குழபபம

கோவை மணட்டி - கோவைக்கொடியாகிய பெண்

கோளவாய - புதுபபுண

கோளபடட - கொளளபபட்ட; கவரபபட்ட

கோளரிமாதவன - சிமமம போலே மேனாணித்து இருககும பரமரசிகன்

கோளியார - கொ்ளளுகையையே இயலபாக உடையவர

கோறறேன - கொமபுததேன

கோனார - ஸவாமி

கோனேரி - திருமலையிலுளள ஸவாமி புஷ் கரிணி கோன-ஸவாமி, ஸவாமி எனற வடசொல சொததுக்கு ரியவனையே குறிக்கும். எனவே புஷ்கரிணியாகிய சொத்தையுடை யவன வேங்கடக்கோன்; அவனது ஏரி - கோனேரி.



தொடர் கட்டுரை)

# ஸஹஸ்ர நாமம்

## நம்மாழ்வார் விளக்கம்

திரு. T.S. இராஜகோபாலன் - சென்னை

### 6. நரஸிம்ஹாவதாரம்

அம்ருத்யு: ஸர்வத்ருக் ஸிம்ஹ:
ஸந்தாதா ஸந்திமாந் ஸ்திர: ।
அஜோ துர்மர்ஷண: சாஸ்தா
விச்ருதாத்மா ஸுராரிஹா ।। 22 ।।

**200.** அம்ருத்யு: - மருத்யுவுக்கும் ம்ருத்யு; யமனையும் நியமித்து நடுங்கச் செய்வோன்.

நாளும் கொடுவினை செய்யும் கூற்றின்
தமர்களும் குறுகில்லார் (10-2-1)

**201.** ஸர்வ த்ருக் - அன்பர், பகைவர், மற்றோர் இவர்களுக்குத் தக்கவாறு நடத்துவதற்காக எல்லாவற்றையும் நன்கு காணவல்லோன்.

வருந்தாத ஞானமாய் உலகை ஒருங்காக
அளிப்பாய் (3-1-5)

[வருந்தாத - முயற்சிசெய்து பெறாத; இயல்பாகப் பெற்ற.]

**202.** ஸிம்ஹ: - (இவன் யார் எனில்) நரசிங்கமாக அவதரித்தவன்

நரசிங்கமதாய உருவே (9-4-8)

**203.** ஸந்தாதா - பகைவனைக் கொன்று பிரகலாதனைச் சேர்த்துக்கொண்டதுபோல சான்றோரைத் தன்னிடம் சேர்த்துக்கொள்பவன்.

அரியாகி இரணியனை ஆகங்கீண்டான் அன்று,
பிரியாது ஆட்செய் என்று, பிறப்பு அறுத்து
ஆள் அறக்கொண்டான் (10-6-10)

[அன்று - அவதரித்தபோது, இப்போது ஆட்செய் என்று. ஆள் அறக்கொண்டான் - கைங்கர்யம் செய்யுமாறு ஆட்கொண்டான்.]

**204.** ஸந்திமாந் - சான்றோரோடு எப்போதும் இணைந்திருப்பவன்.

கண்ணுள்ளே நிற்கும் காதன்மையால் தொழில்
(1-10-2)

**205.** ஸ்திர: - அன்பர்களிடம் தான் கொண்ட அன்பு இவர்களது குற்றங்களாலும் மாற்றவொண்ணாதவாறு நிலைத்துள்ளவன்.

தீர்ந்தார்தம் மனத்துப் பிரியாது, அவர் உயிரைச்
சோர்ந்தே போகல் கொடாச் சுடரை (2-3-4)

[தீர்ந்தார் - பக்தர், மனத்துப் பிரியாது, அவர் உயிரை-ஆத்மாவை, சோர்ந்தே போகல் கொடா - சோர்ந்து போகச் செய்யாத, சுடர் இதனால் பெற்ற ஒளி.]

**206.** அஜ: - தூணில் தோன்றியதால், மற்றவர்களைப் போல பிறவாதவன்.

அவன் வீயத் தோன்றிய, என் சிங்கப்பிரான் (2-8-9)

**207.** துர்மர்ஷண: - விரோதிகளால் தகைக்கமுடியாதவன். வலிமை குறிப்பு.

அரியேறே! (5-8-7)

[ஆணசிங்கம்போல, காணவொண்ணாதவாறு மேனாணிப்புடையவனே! மேனாணிப்பால் சோதி. ]

**208.** சாஸ்தா - இந்தக் கோலத்தோடு எதிரிகளை அடக்கவல்லவன்.

இகலிடத்து அசுரர்கள் கூற்றம் (9-9-2)

[இகல் - பகை.]

209. விச்ருதாத்மா - செவிக்கு இனிய சரிதமுடையவன் (நரஸிமஹாவதாரத்தில்)

சிங்கப்பிரான் பெருமை ஆராயும் சீர்மைத்தே (2-8-9)

210. ஸுராரிஹா - தேவரகளுக்குப் பகைவனான இரணியனைக் கொன்றவன்.

அப்பொன் பெயரோன் திடநெஞ்சம் கீண்ட
பிரானார் (தி.விரு. 46)

[பொன் பெயரோன - ஹிரணயன.]

## 7. மத்ஸ்யாவதாரம்

குருர் குருதமோ தாம
ஸத்யா: ஸத்யபராக்ரம:
நிமிஷோ நிமிஷ: ஸ்ரக்வீ
வாசஸ்பதி ருதாரதீ: ॥ 23 ॥

211. குருர் குருதம: - குருதம: குரு: இழந்த வேதங்களை மீட்டுக்கொடுத்ததால் கலைகளுககெல்லாம் பரமாசார்யன.

நாவினுள் நின்று மலரும் ஞானக்கலைகளுக்கெல்லாம்
ஆவியும் ஆக்கையும் தானே (1-9-8)

212. தாம - பிரளய காலத்தில் சேதன அசேதனங்களுக்கு இருப்பிடமானவன்.

...ஒரு மூவுலகும் தன் வயிற்றிற் கொண்டு
நின்ற வண்ணம் நின்ற மாலை (8-7-9)

213. ஸத்ய: - சான்றோர்க்குப் கலான பெரியோன்.

ருமக்களுக்குள்ளவர்தம் பெருமானை (3-7-5)

214. ஸத்யபராக்ரம: - இவர்களிடத்தும் கபடமில்லாமல் நடந்துகொள்வோன்.

வெறிதே அருள்செய்வர் செய்வார்கட்கு உகந்து (8-7-8)

[தான் விரும்புவோர்களுக்குத் தானே அருள் செய்வான், யாதொரு காரணமுமில்லாமல்]

215. நிமிஷ: - தன் அன்பர்களது விரோதிகளைக் கண் திறந்து பாராதவன்.

உளன் அல்லன் (2-5-10)

[தன்னை விரும்பாதவர்களுக்குப் பெறமுடியாதவன்]



**216.** அநிமிஷ: - அன்பர்களைக் காப்பதற்கு இமைகொட்டாமல் பார்த்துக்கொண்டிருப்பவன்.

உன் அடியார்க்கு என் செய்வன் என்றே
இருத்தி நீ (பெ.திரு. 53)

**217.** ஸ்ரக்வீ - இந்த அவதாரத்திலும் பரத்வ லக்ஷணமான வைஜயந்திவனமாலை அணிந்திருப்பவன்.

(மானிட சாதியில் தான் பிறந்து) புனத்துழாய்
முடிமாலை மார்பினன் (6-4-7)
[எல்லா அவதாரங்களிலும் இவ்வாறே துழாய்மாலை - வைஜயந்தி போல்வது]

**218.** வாசஸ்பதி: - வேதங்களை மீட்டுக்கொடுத்ததால், மாத்ஸ்ய புராணத்தில் மஹாவாக்மீ என்று பாராட்டப்பெற்றவன்.

சூழ்ச்சி ஞானச் சுடரொளியாகி (3-2-4)
[சூழ்ச்சி-யாவற்றையும் சூழ்ந்துள்ள.]

**219.** உதாரதீ: - யாவரும் உய்வதற்காக இவ்வாறு செய்வதால், பரந்த மனப் பான்மை வாய்ந்தவன்.

மீனாய் ஆமையுமாய்... கார்வண்ணனே(5-1-10)
[கார்வண்ணன - மேகம் போல் கைம்மாறில்லாமல் அருள்செய்வதே இயல்பானவன். வண்ணம்-இயல்பு.]

அக்ரணீர் க்ராமணீ: ச்ரீமாந்
ந்யாயோ நேதா ஸ்மீரண: ।
ஸஹஸ்ரமூர்த்தா விசவாத்மா
ஸஹஸ்ராக்ஷ: ஸஹஸ்ரபாத ।। 24 ।।

**220.** அக்ரணீ: - இவவகையில அனபர்களை மேற்பதவிக்கு - பரமபதம் - அழைத்துச் செலவோன்.

காளமேகததை யன்றி மற்று ஒன்று இலம்
கதியே (10-1-1)
[கதி - வழித்துணை; வைகுநததறகு.]

**221.** க்ராமணீ: - நித்ய சூரிகள வாழும் ஸ்ரீவைகுண்டத்திற்கு அழைத்துச் செலவோன்.

விண்ணுலகம் தருவானாய்
விரைகின்றான் (10-6-31

**222.** ச்ரீமாந் - "மத்ஸ்ய: கமலலோசந:" என்று இந்த அவதாரத்தில போற்றப்படுவதால், பரத்வம தோன்ற விளஙகுவோன்.

என் செஙகோலக் கண்ணன், விண்ணோர்
நாயகன் (2-7-1) (பரத்வம் குறிப்பு)

**223.** ந்யாய: - நியாயமே செய்பவன் (குறிப்பாக அன்பர் விஷயத்தில்)

அடியான் இவன் என்று, எனக்கு ஆரருள்
செய்யும், நெடியானை (9-4-10)

**224.** நேதா - அன்பர்களை ஸம்ஸாரத்திலிருந்து கரையேற்றுபவன்.

சன்ம சனமாந்தரம் காத்து, அடியார்களைக்
கொண்டுபோய்த், தன்மை பெறுத்தித்
தன் தாளிணைக் கீழ்க்கொள்ளும் அப்பனை. (5-1-10)
[பெறுத்தி - பெறச்செய்து]

**225.** ஸமீரண: அன்பர்களது இஷ்டத்தைச் செய்வோன்.

வேண்டிற்று எல்லாம் தரும் கோதில்-என்
வள்ளல் மணிவண்ணன் (3-9-5)

## 8. விராட் ஸ்வரூபம்

இவன் பிரபஞ்ச வடிவானவன், புருஷ ஸூக்தம் போல்வன வெளியிடும் மேன்மை விவரிக்கப்படுகிறது.

**226.** ஸஹஸ்ரமூர்த்தா தலைகள் ஆயிரங்கள் வாய்ந்தவன், எங்கும் பரவியிருப்பதால்.

முடிதோள் ஆயிரம் தழைத்த
நெடியோய் (திருவா. 5)

**227.** விச்வாத்மா - தனது ஞான சக்திகளால் எங்கும் பரந்திருப்பவன்.

மண்ணும், நீரும், எரியும் நல் வாயுவும்,
விண்ணுமாய் விரியும் எம்பிரானையே (1-10-2)

**228.** ஸஹஸ்ராக்ஷ: - ஆயிரக்கணக்கான கண்கள் உடையவன்.

துணைமலர்க் கண்கள் ஆயிரத்தாய்! (8-8-10)

**229.** ஸஹஸ்ரபாத் - திருவடிகள் ஆயிரங்கள் வாய்ந்தவன்.

தாள்கள் ஆயிரத்தாய்! (8-8-10)

(தொடரும்)



# திருமலையும் இராமாநுசரும்

டாக்டர். மா. வரதராஜன் - திருப்பதி.



மயரவற மதிநலமருளப பெறற ஆழ்வார்களால பாடல் பெற்ற 108 திவ்ய தேசங்களுள் கோயில எனபபடும திருவரங கம், திருமலை, பெருமாள்கோ யில எனபபடும் காஞ்சீபுரம் ஆகிய மூன்று திவய தேசங் கள் சிறந்தவையாகும. இவற றுள் ஆழ்வார்கள் ஒன்பதின்ம ரும் ஆண்டாளும பாடிய திரு மலை நடுநாயகமாக விளங்குகி றது. இத்திருமலைக்கு இராமா நுசர மூனறுமுறை எழுநதருளி யதைத திருமலை ஒழுகு, திரு வேஙகடமலை வரலாறறுமாலை முதலான நூலகள வாயிலாக அறியலாம.

இராமாநுசர் முதனமுதலாக தன அமமானான பெரிய திருலை நமபிகளிடம ஸ்ரீராமா யண காலக்ஷேபம கேடக வரும் போது திருமலை அடிவாரத்தில் கோயில கொணடிருககும் ஆழ் வார்களைத் திருவடி தொழுதார் எனறு ஆறாயிரப்படி குருபரம் பரா ப்ரபாவ நூல் கூறுகிறது.

இரணடாவது முறை சைவர் களும வைணவர்களும் திருவேங் கடவனைத் தம் தம் கடவுளாக வாதித்தபோது திருவேங்கடவ னுக்குத் திருவாழி திருச்சங்குக ளைக் கொடுக்கவும் வேறுபல திருத்தங்கள் செய்யவும் வந்த தாகக்கூறுவர்.

மூன்றுவது முறை திருவேங் கடச்செல்வம அழியாமல் இருப பதறகாகவும் அத்தைக்காத்து வளர்த்து கைங்கர்யம் செய்ப வரை நியமிககவும் வந்ததாகக் கூறுவர.

இரண்டாவது முறை யாத் ரையாக எழுநதருளிய போது சைவரகள் திருவேங்கடவன் விஷ்ணு அலல என்றும் சிவனோ முருகனோ என்றும் வாதிட்டனர். அந்நாட்டு அரச னான யாதவராயன இராமா நுசரைத் திருவரங்கத்திலிருந்து வரவைழைத்து அவர் மூலமா கத தெளிவுபெற விருமபினான்.

## சைவர்கள் மறுப்பும் இராமாநுசரின் சமாதானமும் :

இக்கலியுகத்தின் தொடக்கத் தில திருவேங்கடவன் தன் அடியவனான தொண்டைமான் சக்கரவர்த்திக்குப பகைவர்களை அழிபபதற்காகத் திருவாழ் திருச்சஙகுகளைக் கொடுத்து அப்பெருமையை உலகுக்கு

ணர்த்த திருக்கையில் திரு ஆழி திருச்சங்குகள இல்லா ல் சேவை சாதித்தான். ருப்பதிக்கு அருகிலுள்ள காள றாஸ்தி என்னும் ஊரிலுள்ள சவர்கள் அப்போது அர ாண்ட யாதவராயனிடம் திரு வங்கடவன் முருகன் என்றும் வன் என்றும் ஹரிஹரன் ன்றும் தம்தம் மனம்போனப யெல்லாம் கூறிவநதனர. அச் மயம் அரசன் திருமலையி ுள்ள அர்ச்சகர்களிடம் ஏதோ ாரணமாகக் கொஞ்சம் கோபம் காண்டிருந்தான். சைவர் ள் இத்தருணத்தைப் பயன டுத்தித் திருமலையை தங் ள் வசப்படுத்திக்கொள்ள எண ரினர். திருமலையிலுள்ள வைணவர்கள் அப்போது திரு ரங்கத்தில் எழுநதருளியிருநத இராமானுசரை வரவழைத்து அரச சபையில் சைவரக ளுடன் வாதபபோர் செய்த ார். ஸ்வாமி எம்பெருமா னாரான இராமானுசர வேதம், வேதாந்தம், இதிகாசம் புரா ணம், திவ்யப்ரபந்தங்கள் முத லானவற்றிலிருந்து ப்ரமாணங ்களைக் காட்டி உபன்யாஸம் செய்து திருவேங்கடவன் மஹா விஷ்ணுவே என்று நிரூபித்துக் காட்டினார்.

திருமலையில கோனேரி திருக் குளத்தை ஸ்வாமி புஷ்கரிணி என்பதால், ஸ்வாமி எனபது குமார ஸ்வாமி எனறும், அங்கு சுப்ரமணியர் அமர்ந்து தவம செய்வதால் உள்ளே இருக்கும் மூர்த்தி சுப்ரமணியரே என்றும சைவர்கள் சொல்ல, அதற்கு இராமானுசர் புராணங்களின் படி இந்த க்ஷேத்ரத்தில தவம் செய்ய பிரமன சிவன சுப் ரமணியன் ஆகியோர் வந்த தால் தவத்தின் பலனைத் தருப வன் வேறொருவனாகவும் அவன் இவர்களைவிட மேம்பட்டவ னாகவும இருத்தல வேண்டும எனறும கூறினார். மேலும் அத்தகையோன நாராயணனே எனறும், ஸவாமி என்ற சுபரமணியர் தவம் செய்த இடத்தைக் குறிப்பதால குளம் ஸ்வாமி புஷ்கரிணி ஆகாது. ஸ்வாமி எனற வடசொல சொத் துக்குரியவனையே குறிக்கும். எனவே சொத்துக்குரியவன வேங்கடவனே எனறு புராணங் கள், வேங்கடாத்ரி மஹாத்ம்யம் முதலான பண்டை நூலகளி லிருந்து மேற்கோள்கள் காட்டிச சமாதானம் செய்தார்.

விஷ்ணு ஆலயத்திறகான அடையாளங்கள் கோயிலில் காணபபெறவிலலை என்று அவரகள் சொல்ல, மூர்த்தியின திருமேனியில் விஷ்ணு சினன மாகிய கௌஸ்துபம், மற்றும மஹாலக்ஷ்மியோடு கூடியவன் திருவேங்டவன் எனறு சொன் னார. அர்ச்சனைக்கு விலவ தளம் பயன்படுத்துவதை எடுத துக்காட்ட, அதற்கு ஹாரீத ஸ்ம் ருதியில் திருமாலின அர்ச் சனைக்கு வில்வதளம உரி யது எனபதை எடுததுக்காட்டி னார். தொண்டைமான் சக்கர வர்த்திக்கு உதவ பெருமாள் சங்கு சக்கரம் அளித்ததாகத் திருவேங்கட வரலாறு கூறுவ தால் கையில் சங்கு சக்கரம் இல்லை எனபதைத தெரிவித் தார். மூர்ததி நாகாபரணம அணிந்து இருப்பதறகுக்கார ணம புராணங்களில் நாகரா ஜனான ஆதிசேஷன் திருமா லுக்கு எல்லா வகையிலும் அமைகிறேன் என்று கூறப்பட்ட தையும், ஆகாசராஜா பெருமா ளுக்கு நாகாபரணம அளித் தான எனபதையும் கூறினார்.

இவ்வாறு பல மறுப்புக்களை யும் சமாதானங்களையும் கேட்ட அரசன் தெளிந்து பெருமாள் முன்பு சங்கு சக்கரங்களையும் சிவனுக்குரிய மானமழு ஆகி யவறறையும் வைக்க, பெரு மாள் சங்கு சக்கரங்களை ஏநதிக்கொண்டு காட்சி அளித தான.

பின்னர் இராமானுசர் ஸ்ரீவைகாநச ஆகம முறைப் படி சம்ப்ரோக்ஷணம் செய் வித்து, செங்கனிவாயன் திரு வம்சததில் பிறந்த பரமபாக வதர்களான ஸ்ரீவைஷணவர்கள் மூலமாக நிதய திருவாராதனம் செய்வித்தார்.

உயர்ந்தும அழகாயுமுள்ள ஆனநதநிலய விமானத்தில் ஸ்ரீவைகானச ஆகம முறைப் படி நானகு திக்குகளிலும் வராக, நரசிம்ம, வைகுண்ட நாத, ஸ்ரீவேங்கடேச தேவதைக ளையும் ஏறியருளப் பணணி னார.

விஷ்ணுவின் பரிகரங்களான திருவனந்தாழ்வான், சேனை முதலியார், கருடாழ்வார, துவா ரபாலகர்களையும் அநதந்த இடத்தில ப்ரதிஷடை செயவித் தார்.

இராமாநுசர் திருவேங்கடம் மூலவர் ஸநநிதியில செயத சீர் திருததங்கள பலபல. அவறறில சிலவறறை இங்கு அனுபவிப் போம்.

திருவேங்கடவன் திருமார்பில (சிலாரூபத்தில) 'அகலகில்லேன் இறையும்' எனறு திருமகள் எழுந்தருளியிருக்கச்செயதே, ஸந் நிதியில திவ்ய ஐச்வர்யம பெரு குவதற்காக வராகபுராணத்தில் சொலலியபடியே இரண்டு கைக ளையுடைய வியூக லக்ஷ்மியை

சுக்ல துவாதசியும் வெள்ளிக்கி ழமையும், உத்தர பங்குனி நட்சத்திரமும் கூடிய சுபயோகத்தில பெருமாள திருமாரபில சாத்துவிததார.

வெள்ளிக்கிழமையில திருமார்பு நாச்சியாரை மாரபினின்று கீழே எழுந்தருளப பண்ணி மூலவருக்கு முதலில திருமஞ்சனம செயயுமபடி கட்டளையிட்டார. பினனர பிராட்டியைக களைநது திருமஞசனம செய்விககுமபோது பிராட்டியின பிரிவைபபொறுககமாட்டாத திருவேங்கடவனுடைய வருத்ததததைப போகக நினைதத இராமாநுசர, பிராட்டியின அபராவதாரமாய் பூமிப பிராட்டியின அமசமாய் ஆண்டாள பெருமாளைப் பிரிநது ஆறறாமையால பாடிய நாச்சியார திருமொழியைத் திருவேஙகடவன கேட்டுத தரிககட்டும் எனறு எணணி அபபோது அநுஸநதிக்கச செய்தார.

திருமஞசனத்திறகுப் பிறகு பெருமாள திருநெறறியில் இரு கோடுகளான திருமண் காப்பைக கருப்பூரப பொடிகளால அமைதது மூனறு நாட்கள காட்சி அளிககசசெயதார.

பினபு, ஸ்ரீபாத்மபுராண வசனபபடி திருவேங்கடவனின திருவவதார நாளான திங்கட்கிழமை அனறு தாம எணணியபடி பகவதநுகரஹம் உணடானபடியால மூககு முதல் பிறைத்திருமணகாபபாகச சாத்திக்கொளளுமபடிச் செயதார.

திருநெறறியில் இரணடு ரேகையாக முத்துததிருமண காப்பு அணிவித்து, திருக்கண் மலருக்கு குளிர்ச்சியாக அஞ்சனககாப்பு சாததுவிததார. மறறைய தினமெலலாம் எல்லாரும் சேவிப்பதற்கு ஏற்பச் செய்தார.

வீரன தன ஆயுதததிற்கு முதலில சநதன புஷ்பங்கள் இட்டு பின்பு தான தரிக குமாபோலே திருவேங்கடவனும தினமும் முககாலமும் திருமாலை சாததியருளுமபோது தமமுடைய விஜய பரமபரைகளுககு முககியமான கருவியான திருவாழி, திருசசஙகு, திருப்பொற்றூழவாரகளுககுத திருமாலை சாத்தின பினபு, திருமார்பு நாசசியார திருமுடி முதலான திவய அவயவங்களுககும திருமாலை சாததுமபடி செயதார்.

திருமலை வளர்சசி பெறவும் திருவேஙகடவன திவய ஐச்வர்யம் மேன்மேலும் வளருவதற்காகவும் அப்போது உற்சவ மூரத்தியாயிருநத வேஙகடததுறைவாரை நிலைததுளள மூரததியாகவும் மலைகினிய நினற பெருமாளை உறசவ மூரததியாகவும் எழுந்தருளப் பணணினார.

வீரநரசிமமதேவன எனபவன் ஆதிசேஷனிடம பட்ட அபசாரம நீஙகப் பெருமாளுக்கு ஒரு நாகாபரணம் செய்து வலது கையில (வைகுணட ஹஸதம) சாததி அருளினான. அதனைக்கணட எமபெருமானார மறறொரு நாகாபரணததைச செய்து தோளவளையோடு சேரதது பக்த ஜனஙகள மனதுககும கண்ணுககும அழகாம்படி இடதுகையில சாத்துவிததார்.

திருமலையில் தினமும திருமஞ்சன உருவமான அழகபபிரானார் இரவு சயன பேரராய் எழுநதருளியிருநத போதிலும ஸ்ரீவைகானச ஆகம முறைபபடி மார்கழி மாதம் முழுதும் ஸ்ரீகருஷணனை சயன பேரராகத் திருபபளளி கண்டருளச் செயதார்.

திருமலையில ருத்ரனுககாக ஸ்வாமி புஷ்கரிணியின மேற்குக் கரையில் தோனறிய வேங்கடாசதரி என்னும் அழகிய சிஙகமூர்த்திககு நித்ய திருவாராதனம ஏதும் நடவாததைக் கணடு எமபெருமானார் அம்மூரத்தியைத திருமலையப்பனின் கோயிலின ஈசானய திசையில் அசசம தரும தோற்றும தணியும்படி ஆனநத நிலய விமானததைப பார்ததபடி பிரதிஷ்டை செயது நிதய திருவாராதனமும நடத்தும்படி செயதார.

ஒரே க்ஷேத்ரததில் இரண்டு விக்ரஹஙகளுக்குச் சமானமாக பூஜாவிதானங்கள செய்யக கூடாது என்று வைகானச ஆகததில் கூறியபடியால், திருவேங்கடவனுக்கு முன்பாக வராஹப்பிரானுக்கு முக்காலததிலும் திருவாராதனமும் அமுது செய்தருளுகையும் நடத்தி வைத்தார.

ஞானப்பிரான ஸந்நிதியில் உதஸவ மூரத்தியையும் ஏறியருள்ப்பண்ணித திருவாராதனம் நடத்தி வைத்தார்.

ஐப்பசி திருவோண நட்சததிரததில் ஸ்ரீவராக ஜயந்தியை முன்னிட்டு விசேஷமாகக் கொணடாடச செய்தார்.

விச்வம்பரன் என்னும் மாமுனிவன தான் அர்ச்சாரூபியாக்கிக்கொணடு ஆராதிக்கப்பட்ட சககரவர்ததி திருமகன் இளைய பெருமாள் ஆகிய மூர்த்திகளை ஊரில் ஏறபட்ட கலவரம் காரணமாக ஒரு பக்தன் வாயி

லாகத் திருமலை அடிவாரத்தில் சேர்த்தருளினான். அப்போது இராமாநுசர் ஸ்ரீராமாயணத்தில் ஸ்ரீவிபீஷணனுக்கு அபயம் அளித்த பகுதியைச் சேவித்திருந்தார். அதன் பயனாக இங்கு சக்கரவர்த்தி திருமகன் எழுந்தருளியதைக் கணடு, பிராட்டியான சீதையைத் திருவவதரிக்கு படிச் செய்து, சக்கரவர்த்தி திருமகனுக்குத் திருக்கல்யாணம் செய்தருளி, திருவடி தொழுது மங்களாசாசனம் செய்து அம்மூர்த்திகளைத் திருவேங்கடவன் ஸந்நிதியில் எழுநதருளப்பண்ணி நித்ய திருவாராதனம் செய்யும்படி கட்டளையிட்டார்.

திருமலைநம்பியை வழியில் தடுத்து அவர் கொண்டு செல்லும் திருமஞ்சன தீர்த்தத்தைத் திருவேங்கடவன் அமுது செய்தருளிய வரலாற்றை அது தடைபெற்ற அதயயனோத்ஸவம் முடிந்த மறுநாளிலேயே திருமலைநம்பி வம்சத்தில் பிறந்த ஸ்ரீவைஷ்ணவர் பாபநாசத்திலிருந்து தீர்த்தம் கொண்டு வரும் போது திருமலையப்பனை அவ்விடத்திறகு எழுநதருளப் பண்ணிக் கொண்டு சென்று அவர் அத்தீர்த்தத்தைப பானம செய்தருளும் பாவனையில் ஓர் உறசவமாக நடத்திவைத்தார் இராமாநுசர்.

திருவரங்கத்தில் எம்பெருமானாரிடம் திருவாய்மொழி அர்த்தம் கேட்கும்போது 'ஒழிவில காலமெல்லாம்' என்ற பதிகம நடவா நிற்க, 'சிந்துபூமகிழும திருவேங்கடம் எனற இடத்திற்கு ஏற்ப திருவேங்கடவனுக்கு உகப்பாகத் திருமஞ்சனம அமைத்து திருமாலை கட்டிச் சாத்துவார். இக்கோஷ்டியில் உளரோ?' என்று கேட்டதற்கு அனந்தாழ்வான் என்னும் ஆசாரியர் இசைவு தெரிவித்து ஆசார்ய பரதந்த்ரராய் விடை கொண்டு திருலையில் நந்தவனம் அமைத்து கைங்கர்யம் செய்து வநதார. எம்பெருமானார திருமலைக்கு எழுநதருளும்போது இக்கைங்கர்யத்தைக் கண்டு ஆசார்ய பரதந்த்ரரான அனந்தாழ்வானை வளர்த்த தனால் பயன பெற்றேன் என்று கூறி அணைத்துக் கொண்டார்.

ஒரு சமயம அனந்தாழ்வான் தமது தோட்டத்தில் புஷ்பம களவு போனதைக் கண்டு பிடிக்க வேணும் என்று இரவில் தூங்காமல் தோட்டத்தைச சுற்றி வந்தார். பெருமாளும் பிராட்டியுமாக ராஜ தம்பதி வேடததில் வந்து புஷ்பங்களைக் கொயது செலவதைக் கண்டு அனந்தாழ்வான பின்னே ஓட பெருமாள் மட்டும் ஓடி அப்ரதக்ஷிணமாகக் கோவிலுக்குளளே புகுநதார் என்றும், பிராட்டி பிடிபட்டு பின்னர விடுவிக்கப்படடு தன பெணணுக எண்ணி அவளைப் பெருமாளிடம் சேர்ப்பித்த நிகழ்ச்சியினைக் கேட்டு எம்பெருமானார் ப்ரஹ்மோத்ஸவத்தின் ஏழாவது நாள் மாலை நடக்கும தோட்ட உற்சவத்தில பெருமாளை அப்ரதக்ஷிணமாக எழுந்தருளச் செய்தார். எட்டாம் நாள் காலை நடக்கும் திருத்தேர் உற்சவத்தில் தோட்ட வாசலில் மருமகப்பிள்ளையான பெருமாளுக்கு அனந்தாழ்வான் மாமனார் செய்யும் ஸம்பாவனையாகத் திருப்பரிவட்டம அணிவிக்கச செய்தார்.

சோழவரசனது தொல்லையினால் திருச்சித்ரகூடத்திலிருந்து உபயநாச்சிமாருடன் எழுநதருளின தேவாதிதேவன் என்னும் கோவிநதராஜ உறசவமூர்த்தியோடு ஒரு மூலவரை ஏறியருளபபண்ணி அவருடன் கீழத் திருப்பதியில் பரதிஷ்டை செயவிததார.

இங்ஙனே திருமலையில் இராமாநுசர் செய்தருளிய நியமனங்கள பல திருமலை ஒழுகில காணத்தக்கன. விரிவுக்கு அஞ்சி இததுடன் அமைகிறேன்.

✿✿✿✿✿✿✿✿

## கால்நடை பாதை

திருமலை அடிவாரமான அலிபிரியிலிருந்து 'காலி கோபுரம்' என்று வழங்கபபெறும் இடம்வரை தற்போது உளள 'கால்நடைப்பாதை'யினை சுமார் கி.பி. 1550ஆம் ஆண்டோ அல்லது அதற்கு முன்போ வேயப்பட்டிருக்க வேணடும் என்று கூறப்படுகிறது. அலிபிரி அருகே உள்ள ஒரு சிறிய ஸ்ரீவேங்கடேஸவரசுவாமி கோயில் சுவர் கல்வெட்டிலிருநது இப்பாதையை மட்ல திருவேங்கடநாதர் மற்றும் சின்னமாம்பா என்போரின மகனான மட்ல குமார அனந்தன் என்பார் வேய்ந்ததாகத் தெரிகிறது. இப்பாதைக்கு 'சோபன மார்க்கம்' என்று அன்று அழைககப்பெற்றது. மேலும் மட்ல குமாரஅனநதன இன்றுளள 'காலி கோபுரத்'தையும் கட்டியதாகத தெரிகிறது. மேலும் கி.பி. 1387ஆம் ஆண்டு கோயில கல்வெட்டுக்குறிப்பிலிருந்து 'முழங்கால் முறிப்பான் படி' எனும திருமலைக்குச் செல்லும்படியான நடைபாதை ஒன்று விளஙகியது தெரியவருகிறது.

# திவ்ய கவி போற்றும் திருமலையும் திருவேங்கடவனும்

திரு. என். ராமஸ்வாமி அய்யங்கார் - ஸ்ரீவில்லிபுத்தூர்.

வேங்கடாத்ரி ஸமம் ஸ்தாநம்
ந பூதம் ந பவிஷ்யதி ।
வேங்கடேச ஸமோ தேவோ
ந பூதோ ந பவிஷ்யதி ।।

## முன்னுரை :

திவய கவி எனபவர் அழகிய மணவாளதாசர எனறு போற றப்படும் பிள்ளைப பெருமாள ஐயஙகார. இவர அருளியது 'அஷடபிரபநதம்'. "அஷடபிரபந தம் படிததவன அரை விக துவான" என்ற பழமொழியால இவர் நூலின பெருமை அறிய லாம். இவர் வடதிருவேங்கட வரபால மனமுருகி திருவேஙக டததந்தாதி, திருவேங்கடமாலை, என்கிற இரண்டு பிரபநதங கள பாடியுளளார. இரண்டு பிரபந்தங்களில திருமலையின் பெருமை விளக்கும் பாடல களில சிலவறறையும, திருவேங் கடவனின சீர்மையை விளக் கும பாடலகள் சிலவறறையும் காணலாம.

## திருமலையின் பெருமை

திவ்விய கவி திருமலை யின் சிறபபை பேசி மகிழ்கி றர். சிவபெருமானும் நான்மு கனும், தேவேநதிரனும், முனி வர்களும தேவர்களும் காலையி லும் மாலையிலும் தம மனதில் வைததுப போற்றப்படும சிறந்த மலை எது என்றால் மலை போனற இரண்டு கைகளாலும் திருப்பாறகடலைக் கடைநத எம் பெருமான எழுநதருளியிருக்கும திருவேஙகடமாகும்.



மாலை மதிக்குஞ்சி ஈசனும்
போதனும் வாசவனும்
நூலை மதிக்கும் முனிவரும்
தேவரும் நோக்கி யந்தி
காலை மதிக்குள் வைத்தேத்தும்
திருமலை கைம் மலையால்
வேலை மதிக்கும் பெருமான்
உறை திருவேங்கடமே.
(திருவேங்கடத்தந்தாதி பாடல-

(மதி-பிறைச்சந்திரன்; குஞ்சி தலை மயிரமுடி; ஈசன-சிவன் போதன-பிரமன; வாசவன்-தே வேநதிரன; நூல-சாஸதிரங்கள் அநதி-மாலை; வேலை-கடல)

திருவேஙகட முடையான தேவாதி தேவனாகையாலே மற் றைத்தேவர், முனிவர் முதலிய யாவரும் அவன் எழுந்தருளியி ருக்கிற அவ்விடத்தை சந்த்யா கால மிரண்டிலும் தரிசித்து தியானித்து, துதித்து வழி படுவர. இங்ஙனம் சிறப்பு டைய மலையாதல் பற்றித் திரு மலை என்று தென்மொழியி லும், 'ஸ்ரீசைலம்' என்று வட மொழியிலும திருவேங்கடத்துக் குச் சிறப்பாகப பெயர் வழங் கும்.

# A HEALING TOUCH

## T. T. DEVASTHANAMS INTRODUCES SRI BALAJI AROGYAVARAPRASADINI SCHEME

For ages, Tirumala, the abode of Lord Venkateswara, has been a great centre of pilgrimage Thousands of devotees visit the sacred hills every day and offer their solemn prayers to the Lord for their spiritual and physical well-being

Alleviating human suffering has been a part of dedicated efforts of TTD to the mankind TTD already manages a Leprosorium, centre for physically handicapped, a poor home and also a central hospital To provide the most advanced medical technology to the needy, the TTD has launched another monument, a blessing from the Lord by opening Sri Venkateswara Institute of Medical Sciences -- a sophisticated super speciality centre on the lines of AIIMS of New Delhi & JIMPER of Pondicherry and PGI of Chandigarh Total well being of man is the aim of Sri Venkateswara Institute of Medical Sciences, which apart from offering service, training and education in medical sciences, also encourages Research and development

The doors to such a state of the art technology should be open to our poor and disabled brethren

With a view to achieving this, Sri Venkateswara Institute of Medical Sciences has introduced a New scheme Balaji Arogyavaraprasadini Scheme To accomplish the goal of proving the sophisticated medical technology to every individual at an affordable rate, we invite the generous co-operation of philanthropists and the general public

### The Scheme in essence:

A donor can make an endowment of Rs 1000/- or multiples thereof / Rs 1 lakh / Rs 5 lakhs / Rs 10 lakhs to T T Devasthanams which will in turn contribute matching grant The entire amount will be deposited in fixed deposit in a nationalised Bank and the interest accrued on it will be utilised for providing free medical services to the poor and the needy

A Chair in Sri Venkateswara Institute of Medical Sciences will be named after the donor who contributes Rs 10 lakhs or above These endowment chairs are purely research oriented

* Donations can be made by any individual / family / company / firms etc
* The name of the donor who endows Rs 5 lakhs or more will be displayed prominently in the Reception hall of the hospital
* The discharge ticket of the benefited patient will carry the name of the donor

### Additional Benefit and facilities :

* Donations to Sri balaji Arogyavaraprasadini Scheme are exempted from Income Tax under 80 (G)
* Paid rooms / Air conditioned rooms will be allotted to family members of the donor in the hospital
* Paid rooms can be named after donors who contribute a sum of Rs 5 lakhs or above
* By paying Rs 5 lakhs and above, a donor may sponsor one operation per year
* Donors can sponsor feeding of the In-patients and out-patients They may also sponsor a travel fellowship for the faculty per year

All donations, by D Ds drawn in favour of The Executive Officer, T T Devasthanams, Tirupati-517 501 (Andhra Pradesh) should reach the Director, Sri Venkateswara Institute of Medical Sciences, Tirupati along with the following particulars

* Name and address along with the latest passport-size photographs of the family members of the donor who contributes Rs 1 lakh or more
* Name and address of the person to whom Income Tax Exemption Certificate is to be issued

The donors are also welcome to offer equipment, vehicles etc to SVIMS or even sponsor health camps in rural areas, if they so desire Further details can be had from

**The Executive Officer**
**T.T. Devasthanams, Tirupati**
**or**
**The Director**
**Sri Venkateswara Institute of Medical Sciences, Tirupati**

**EXECUTIVE OFFICER**



Srivari Aswa Vahanam

*Visit....*

# SRI PADMAVATHI DEVI TEMPLE

## TIRUCHANUR



## TEMPLE TIMINGS ON FRIDAYS

| | | | | |
|---|---|---|---|---|
| 5-00 a m. | to | 5-30 a.m. | — | SUPRABHATAM |
| 5-30 a.m. | to | 6-30 a.m. | — | Sahasranama Archana<br>Nitya Archana & 1st Bell |
| 6-30 a m. | to | 7-00 a.m. | — | Sadalimpu |
| 7-00 a.m. | to | 8-00 a.m | — | ABHISHEKAM |
| 8-00 a m. | to | 9-00 a m | — | Alankaram to Moolavarlu<br>2nd Bell |
| 9-00 a.m. | to | 8-00 p.m. | — | SARVADARSANAM |
| 6-00 p.m. | to | 8-00 p.m. | — | Procession and Unjal Seva |
| 8-00 p.m. | to | 8-30 p m | — | Night Kainkaryams & Night Bell |
| 8-30 p.m. | to | 9-00 p m | — | SARVADARSANAM |
| 9-00 p.m. | | | | Suddhi & Ekanta Seva |

***Note :***

7-00 a.m. to 8-00 a m. — Grihasthas can participate in Abhishekam by paying Rs. 100/- per head

Abhisheka Darsanam can be had on payment of Rs. 5/- per head.

திருவேங்கடததந்தாதியில அமைந்த இன்னொரு பாட லும் கற்போருக்குக கனி விருந தாக அமைகின்றது. தன் னிடத்து வரும் அடியார்களின பிறப்பபையொழிததுப் பரமபதத தில் சேர்பபிகக்கும் திருமலையே, அறம் பொருள் இனபம் வீடு என்ற நானகு உறுதிபபொருள களையும் இவ்வுலகததினர்க்கு அளிக்கும் நினைவால் எமபெருமான் எழுநதருளியிருக்கும இடமாகும். ஆழ்வார,

திருவேங்கடம் நங்கட்குச்
சமன்கொள் வீடு தருந்தடங்குன்றமே"
(திருவாய்மொழி 3-3-7)

என்றும்,

"திருவேங்கட மாமலை
ஒன்றுமே தொழ நம்வினை ஓயுமே"
(திருவாய்மொழி 3-3-8)

என்றும் அருளிச்செய்தது இங்கு கருதத்தக்கது.

புண்ணியம் காமம் பொருள் வீடு
பூதலத் தோர்க்களிப்பான்*
எண்ணியங் காமன் திருத்தாதை
நிற்கும் இடம் என்பரால்*
நண்ணி அங்கு ஆம் அன்பரைக்
கலங்காத் திருநாட்டிருத்தி
மண்ணியங்காமல் பிறப்பறுத்
தாளும் வடமலையே
(திருவேங்கடத்தந்தாதி-பாடல்-38)

திவ்யகவியின் 'திருவேங்கட மாலை' திருமலையின் பெருமையை அழகாக சிததரித்துக்காட்டுகிறது.

நான்முகன், சிவன், இந்திரன், முருகன், ஆதிசேடன் ஆகியோருடன் திருமலையை ஒப்பிட்டுக் காண்கிறார் திவ்யகவி. பிரமன் நாற்புறமும் நோக்கிய நான முகம் உடையவன். ஆகவே பிரமனை 'திசைமுகன்' என்றும் 'நான்முகன்' என்றும் அழைப்பர். பிரமனைப் போல், திருமலையும் எத்திசையிலுள்ளோராலும் தொழுது ஏத்தியிறைஞ்சப் படுகிறது. பிரமன் திருமாலின திருநாபி தாமரை மலரின்று தோன்றியவன. திருமலையில அநேக புண்ய தீரத்தஙகள உண்டு.

நாலுதிசை முகமும் நண்ணுதலால்
ஒண்கமலம்
மேலுறலால் வேதாவாம்
வேஙகடமே
(திருவேங்கடமாலை-பாடல்-4)

திருவேங்கடமலைககும் சிவ பெருமானுககும் அநேக ஒற றுமைகள உண்டு. சிவபிரான் பகீரதனது வேண்டு கோளினால கங்கையை முடி மீது கொண்டவர்; சந்திரனை முடியின் மீது கொண்டவர்; கொனறை மலரை அன்போடு சூடிககொணடவர்; தாருக வன முனிவர்களாலே ஏவப்பட்டுத் தன்னைக் கொலலவந்த நாகங் களையும், மானையும் வலியடக்கி நாகங்களை ஆபரணமாகக்கொணடு மானை இடக் கையிலேந்தியவர்; சடைமுடியுடையவர். திருவேங்கடமலை யில் திவவிய தீர்த்தங்களும், கொனறை மரங்களும நாகங் களும் , மானகளும இருக்கின றன. சிவபெருமானின் முடி யில் சநதிரன இருபபதுபோலவே, உயர்ந்த திருமலையின் மீது சந்திரன தோன்றுகிறான். சிவபெருமானிடம் சடைமுடியிருப்பதற்கேறப வேங்கடத்தில் அடர்ந்த வளம் உள்ளது.

பாணி பிறை கொன்றை பணிசூடி
மானேநதி
வேணியரனைப் பொருவும்
வேங்கடமே...
(திருவேங்கடமாலை-பாடல்-5)

வேங்கடம் இந்திரனுக்கு ஒப்பாகின்றது. இந்திரனுக்கு மால் என்ற ஒரு பெயர் உண்டு; இநதிராணியைக் கூடியுள்ளான; வச்சிராயுதத்தைக் கொண்டிருக்கின்றான். செம்புளிகளையுடைய ஐராவதம் என்ற யானை மீது ஏறுகின்றான். அங்ஙனமே, வேங்கடமும் பெருமையுடையது (மால) சந்திரன (சசி) தன் மீது பொருந்தபபெற்றது; வசசிர ரத்னக்கற்களைத் தன மேலுடையது; யானைகள் தங்கப்பெறுவது.

மாலாய் சசி தழுவி வச்சிர
மேந்திப்புகர்மா
மேலாய்ப் புரந்தரம் வேங்கடமே.. "
(திருவேங்கடமாலை-பாடல்-6)

வேலன் வேங்கடத்துக்கு ஒப் பாகின்றான். வேங்கடத்தில் வள்ளிக்கொடிகள் உள்ளன. வேலன் வளளிமணாளன். மலையில ஆறுகள் உள்ளன. வேலனுக்கு ஆறுமுகம். மலையில் மயில்கள் உலவுகினறன. வேலனுக்கு மயில வாகனம்.

வள்ளி புணர்நதாறுமுகமன்னிமயில்
மேற்கொளலால்
வெள்ளிலைவேல் வேள்போலும்
வேங்கடமே....
(திருவேங்கடமாலை-பாடல்-7)

அடுத்து ஆதிசேடனுக்கும் வேங்கடத்திறகும ஒப்புமை கூறப்பெறுகினறது. அரவம் என்றால் ஓசை என்னும் பொருளும், பாம்பு எனற பொருளும உண்டு. பறவைகளின ஒலியும், அருவி நீர பெருகிய ஒலியும் போர் செய்கினற யானை முதலியவற்றின் ஒலிகளும் நீஙகா திருபபதால் வேங்கடமலை அரவவெறபாயிற்று. சேஷகிரி என் பது தமிழில 'அரவவெற்பு' என்று பெயர் பெற்றது.

புள்ளரவம் நீரரவம் போர்மா
அரவம் அரு
வெள்ளரவம் வெற்பாகும் வேங்கடமே...
(திருவேங்கடமாலை-பாடல்-8)

இவ்வுலகினின்று பிறப்புத் துயரமொழிந்து மீளாவுலகமாகிய பரமபதத்தை அடைந்தவரும் திருவேங்கடத்தின் சிறப்பையும் திருவேங்கடமுடையான பேரானந்தமதரும் தன்மையையும் கருதி அங்குநின்று மீண்டு இங்கு வந்து தொழ விரும்புவர் என்கிறார் திவ்யகவி.

மாண்டு பிறக்கும் துயர் போய்
வைகுந்தம் புககவரும்
மீண்டும் தொழ காதலிக்கும்
வேங்கடமே...
(திருவேங்கடமாலை-பாடல்-10)

ஒப்பற்ற சிறப்புள்ள நான்கு வேதங்களும் நான்கு பக்கங்களிலும் வேலி போலச் சூழ்ந்து துதிக்கப்பெற்ற வேங்கடம் என்கிறார் கவி.

கோலியொரு நான்கு குலமறையு
நாற்றிசையும
வேலி யென நின் றேத்தும்
வேங்கடமே....
(திருவேங்கடமாலை-பாடல்-11)

கரம பந்தத் தொடர்ச்சியின்றி ஞான, ஆநந்தங்களைத் தரும தன்மையதான முத்தியுலகைத் தன்னையடைந்தார்க்குத் தந்தருளும மகிமை திருவேங்கடமலைக்கு உண்டு. இந்தப் புகழைக் கேட்டறிந்து, அத்தன்மையில்லாதனவான பொன் மலையான மகா மேருவும் வெள்ளிமலையான கைலாய கிரியும் தமது தாழ்வையும் வேங்கடமலையின் உயர்வையும் நோக்கி அதற்குத் தாம் கீழ்படிந்து அதனை வணங்குகின்றன. பொன்மலைக்கும் வெள்ளி மலைக்கும் 'நாம் பொன்மயமாகவும, வெள்ளிமயமாகவும் இருக்கிறோம்'' என்கிற இறுமாப்பு ஒழிதற்கு காரணமாயிற்று வேங்கடத்தின் வீடளிக்கும் திறம்.

தெள்ளியதோர் வீடருளஞ் சீர் கேட்டு
பொன் மலையும
வெள்ளிமலையும் பணியும்
வேங்கடமே...
(திருவேங்கடமாலை பாடல் - 12)

பிறக்குங் காலத்தும் வளர்ந்து உயிர்வாழும் காலத்தும் இறக்குங்காலத்தும உண்டாகின்ற பலவகைத் துன்பங்களும், அவற்றிற்கெல்லாம் காரணமான வினைத்தொடர்களும் திருமலைக்கு வந்தவுடன் தீயினில் தூசாகும என்கிறார் கவி.

நோவினையு நோயினையு நோய்
செய் வினையினையும்
வீவினையுந் தீர்த்தருளும் வேங்கடமே...
(திருவேங்கடமாலை-பாடல்-14)

திருவேங்கடமலையின் வரந்தரும் ஆற்றல் சொல்லுந்தரமன்று. பைத்தியம், மகப்பேறு, இளமை, முடம், கூன், குருடு, செவிடு, ஊமை போன்ற குறைகள் யாவற்றையும தீர்த்து வைப்பது திருவேங்கடமாகும்.

பித்து, மலடு, ஊமை, முடம், பேய்,
குருடு, கூன், செவிடு
மெய்த்துயர் நோய் தீர்த்தருளும்
வேங்கடமே...
(திருவேங்கடமாலை-பாடல்-15)

பிரபஞ்ச வாழ்வில் ஆசை முழுவதும் ஒழிந்து தன்னிடம் வந்து சேர்ந்த முனிவர்களுக்கும் பிரமனையும் யமனையும் விலக்குவது வேங்கடம். பிறப்பையும் இறப்பையும் ஒழிக்கும். நிலவுலக வாழ்வினை விரும்பியவர்கட்கும் துன்பவகைகளை ஒழிப்பது திருவேங்கடம். இரண்டாவது அடியிலுள்ள "வேதனை கூற்றைத் தவிர்க்கும்" என்ற அடி சிலேடைப் பொருளில் அமைந்தது. வேதனை-பிரமனை, கூற்றை-யமனை என்பது முதற்பொருள். வேதனைக் கூற்றை-துன்பங்களின் வகைகளை; இஃது இரண்டாவது பொருள.

காதலித்துச் சார்ந்தவர்க்கும்
காமியதைச் சார்ந்தவர்க்கும்
வேதனைக் கூற்றைத் தவிர்க்கும்
வேங்கடமே...
(திருவேங்கடமாலை-பாடல்-51)

'ஞானம், அனுட்டானம் இவை நன்றாகவேயுடையவனான குரு' வினிடத்து உபதேச மொழிகளை கேட்டு உணர்ந்து பற்றுக்களைத் துறந்தவர்கட்கு மனமதனால் வரும் இடையூற்றை நீக்கும் மலை. தீங்கிலலாமல இல்லறவொழுக்கத்தில வாழ்பவர்களுக்கும யாகத்திற்கு இனமான நற்செயல்களைச் செய்வதற்கு இடமாக உள்ளது இத்திருமலை.

கேள்வித்துறவோரும் கேடறவில்
வாழ்வோரும்
வேள்விக் கினமாற்றும் வேங்கடமே..
(திருவேங்கடமாலை-பாடல்-52)

## திருவேங்கடவனின் சீர்மை

கலியுகத்தில்கண்ட தெய்வமாக விளங்குபவர் திருவேங்கடவன். செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமால் திருவேங்கடவன். ஆகவே திருவேங்கடவனை "கலௌ வேங்கடநாயக'' என்றும் "கலௌ ப்ரத்யக்ஷ தைவதம்" என்றும் ஆன்றோர் போற்றுகின்றனர். திவ்ய கவி திருவேங்கடவனை போற்றும கவிகளைக் காணலாம்.

## திருவேங்கடத்து மாலையன்றிப் பாடாது என்வாய்

ஆதிமூலமே என்று முறையிட்ட கஜேந்த்ராழ்வானுடைய முன்னிலையில் எழுந்தருளி, யானையின் துயர்நீக்கி நீல நிறமுள்ள மேகம் போல் காட்சி தந்து அருளியவன் திருமால்,

பால்மயமான கடலின் நடுவில் யோக நித்திரைகொண்டருளு கிற ஞானசொரூபியுமாகியவன் திருமால; திருவேங்கடமலையில எழுநதருளியிருககிற அததிரு மாலை அலலாமல் வேறொரு கடவுளை எனது வாயானது பாடித் துதியாது என்கிறார் கவி. இதனால் கவி புறந் தொழாமாந்தர் என அறியலாம். பரதேவதையாகிய ஸ்ரீமந்நா ராயணனைத் தவிர பிற தேவ தைகளை வழிபடாமை என்கிற ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணமுடை யவர். எம்பெருமானைப் பாடுவ தேயன்றித் தனிகர்களான மனி தர்களுமுட்பட மற்றெவரையும் பாடாது எனவாய் என்றும் கவி யின் கருத்தாகலாம்.

மூலமே என்ற கரிமுன் வந்து
இடர் தொலைத்து
நீலமேகம் போலே நின்றானைப
பாலாய
வேலை நடுவில் துயிலும்
வித்தகனை வேங்கடத்து
மாலையன்றிப் பாடாதென்வாய்
(திருவேங்கடமலை காப்பு-2)

நம்மாழ்வார் உபதேசிக்கும போது,

சொன்னால் விரோதமிது ஆகிலும்
சொல்லுவன கேண்மினோ
என்னாவிலின் கவி யானொருவர்க்கும்
கொடுக்கிலேன்*
தென்னா தெனா வென்று வண்டு
முரல் திருவேஙகடத்து*
என்னான என்னப்பன்
எமபெருமான் உளனாகவே
(திருவாய்மொழி 3.9.1)

என்று அருளியது இஙகு நினைவு கூறலாம்.

## திருவேங்கடவனின் திருமேனி

திவயகவி திருவேஙகடவனின திருமேனி எழிலை வருணிக் கினறார. திருவேஙகடவன நீலமேகத்தின் நிறத்தையுடை யவன் என்பதை "குளிர்ந்து இருணட காரின் வடிவு" என் றும் "சலம் கவரும மஞ்சு அனையார்" என்றும் தெரிவிக் கிறார் கவி. திருவேஙகடவன காயாம்பூ நிறத்தையுடைய வன் என்பதை "நல்ல புது பூவை வண்ணத்தான" என்பர். நான்முகன், சிவன் என்னும் இருதேவர்களையும் தன் திருமே னியில வைததிருப்பவன என் பதை "போதன் சிவன என றும் மறறு இருவர அஙகத தான்" எனபர். திருவேஙகடவன கதை, வாள, அம்புகள் பொருந் திய வில், திருச்சஙகு, திரு வாழி ஆகிய ஆயுதங்களைக கொண்டவன் எனபதை "தண டொடு வாள கோல அமரும் காரமுகதது ஆரகோடு, ஆழி யார்" என்பர. 'அகலகிலலேன இறையும்' எனறு கூறும் அலர மேல்மஙகையைத் திருமாரபில கொண்டிருப்பவன திருவேஙகட வன்.

## திருவேங்கடவன் முக்திக்கு வித்தகன்

திவ்விய கவி உலகுககு உபதே சிககிறார். "வீடு (மோக்ஷம்) பேற றி க்கு மூலம் அப்பொருளோ இப்பொருளோ என்று ஆராயத் தொடங்கி பொய்யான பரசமய நூலகளைத தொணடை நோகக் கதறிப்படிதது . தொகுதத பல புத்தகங்களையுடையவர் களே! மோக்ஷசாதநமான பரம் பொருள் இனனதென்ற உண மைப பொருளை யான் உறு தியாகச சொலல அதுகேட்டு உய்ய வாருங்கள். கடல் சூழ்ந்த உலகமுழுவதையும் பிர ளய காலத்தில் உடகொண் டருளிய, திருவேங்கடமலையில் எழுநதருளியிருக்கும் திருமாலே, வீடுபேறறுக்குச் சாதநமான ஞான சொரூபி என்றே வேதங் கள் பலமுறை வற்புறுத்திக் கூறும்" என்று கவி உபதேசிக் கிறார்.

சித்திக்கு வித்ததுவோ இதுவோ
வென்று
தேடிப் பொய்நூல்
கத்திக்கு வித்தபல் புத்தகத்தீர்!
கட்டுரைக்க வம்மின்
அத்திக்கு வித்தனையும் உண்ட
வேங்கடத் தச்சுதனே
முத்திக்கு வித்தக னென்றே
சுருதி முறையிடுமே*
(திருவேங்கடத்தந்தாதி-பாடல் 33)

இப்பாடலை ஆழ்வார அருளிய கீழ்கண்ட பாடலுடன் ஒப்பிட டுக்காணலாம்.

பரந்த தெய்வமும் பல்லுலகும்
படைத்து
அன்று உடனே விழுங்கி
கரந்து உமிழந்து கடந்து இடந்தது
கண்டும் தெளிய கில்லீர்;
சிரங்களால் அமரர் வணங்கும
திருக்குருகூர் அதனுள்
பரன்திறம் அன்றிப் பல் உலகீர்
தெய்வம்
மற்றுஇல்லை பேசுமினே.
(திருவாய்மொழி 4-10-3)

## 'வேங்கடவெற்பர் அடிகாண்மின் அனைவருமே'

திவ்யகவி "உடுததுக்கொள் ளும் ஆடையையும் உணணும உணவையும் தேடிப் பெறு வதறகாகவே அலைகினறவர் களே! இனிமேலும நீங் கள் எடுக்கவேண்டிய முடை நாறறததையுடைய உடம்புகளை (பிறப்புகளை) யொழிப்பதற்கு என்ன உபாயம் செய்வீர்கள்? மத ஜலங்களையும், வலிமை யையும் உடைய யானையை (கஜேந்த்ராழ்வானை) தொட்ட ருளிய திருவேங்கடமலையையு டையவருடைய திருவடிகளை நீங்கள் எல்லோரும் தரிசியுங்

கன். பிறவி என்னும் நோய்க்கு இதுவே மருந்து" என்று உப தேசிக்கிறார்.

உடுக்கும் உடைக்கும் உணவுக்கு
மேயுழல்வீர்! இனிநீர்
எடுக்கும் முடைக்கு ரம்பைக்
கென்செய்வீர்? இழிமும்மதமும்
மிடுக்கும் உடைக்குஞ்சரம் தொட்ட
வேங்கடவெற்பர் அண்ட
அடுக்கும் உடைக்கும் அவரடி
காண்மின் அனைவருமே

(திருவேங்கடத்தந்தாதி பாடல் -35)
(முடைக்குரம்பை-நாற்ற உடல்; குஞ்சரம்-யானை)

## திருவேங்கடவனின் திருநாமங்களின் சிறப்பு

"பிரமன், சிவன், திருமகள் என்ற மூன்று பேரை தமது திருமேனியின் பாகங்களிலே பொருந்துமபடி வைத்து, கற்பாந்தர காலத்திலே பூமியையும் க்ருஷ்ணாவதார காலத்திலே திருவாய்ப்பாடியில் தயிரையும் நெய்யையும் அமுது செய்தவன் எமது திருவேங்கடவன். அப்பெருமானுடைய பல திருநாமங்கள் தம்மைச் சொன்னவர்களுடைய துன்பங்களை ஒழிக்கும், பிறப்பை வேரோடு அழிக்கும். முடிவில்லாத பேரின்பங்களையும் சிறந்த பதவிகளையும் தரும்" என்கிறார் கவி.

துன்பங்களையும் சனனங்களையும்
தொலைவு அறு பேர்
இன்பங்களையும் கதிகளையும் தரும்
எங்கள் அப்பன்
தன் பங்கு அளையும் படி மூவரை
வைத்துத் தாரணியும்
பின்பு அங்கு அளையும் இழுதும்
உண்டானுடைப் பேர்பலவே

(திருவேங்கடத்தந்தாதி -பாடல்95)

இவ்விடத்தில் கீழ்வரும் வடமொழி சுலோகங்கள் நினைக்கத்தகும்.

வேங்கடேசோ வாஸுதேவ:
வாரிஜாஸந வந்தித: ।
ஸ்வாமி புஷ்கரிணீ வாஸ:
சங்க சக்ர கதாதர: ॥
பீதாம்பரதரோதேவ: கருடா
ரூட சோபித: ।
விஸ்வாத்மா விஸ்வவாஸ:
விஜயோ வேங்கடேஸ்வர: ॥
ஏதத் த்வாதஸ நாமாநி
த்ரி ஸந்த்யம ய: படேந் நர: ।
ஸர்வ பாப விநிர்முக்தோ விஷ்ணோ:
ஸாயுஜ்யமாப்நுயாத்: ॥

## திருவேங்கடவனை வணங்கினவர் அடையும் பயன்

திருவேங்கடவனை வணங்கினவர் அதன் பயனாக மறுமையில் ருத்திர பதவி, பிரமபதவி இந்திரபதவிகளையடைவர்.

ஏறுகடாவுவர் அன்னம் கடாவுவர்
ஈர் இருகோடு
ஊறுகடாம் மழை ஓங்கல் கடாவுவர்
ஓடு அருவி
ஆறுகடாத அமுது எனப்பாய
அரி கமுகும்
தாறுகள் தாவும் வட-
வேங்கடவரைத் தாழ்ந்தவரே

(திருவேங்கடத்தந்தாதி பாடல்95)

## வேங்கடவனிடம் அன்புடையார்க்கு 'வைகுந்தம் தூரமன்றே'

திருவேங்கடவன் மாயையையுடையவன்; க்ருஷ்ணாவதாரம் செய்தவன்; நீலமணிபோன்ற நிறமுள்ளவன்; கேசவன் என்னும் திருநாமமுடையவன்; நிலவுலகத்தையும் மேலுலகத்தையும் அளந்தவன்; அவனுடைய கண்கள் நல்ல செந்தாமரை போலிருப்பன; இலங்காபுரியில் வாழ்ந்த தீயவனான இராவணனது தலைகளைத் தனது அம்பினால் துணித்திட்டவன்; திருவேங்கடமலையில் எழுந்தருளியிருக்கும் பரிசுத்த மூர்த்தி. அப்பெருமானிடம் பக்திப் பேரன்பையுடைய பாகவதர்களுக்கு முக்தியுலகமாகிய ஸ்ரீவைகுண்டமென்படுகிற பரமபதம் மிக்க சமீபத்திலுள்ளது என்கிறார் கவி.

மாயவன் கண்ணன் மணி வண்ணன்
கேசவன் மண்ணும் விண்ணும்
தாயவன் கண்ணன் கமலமொப்பான்
சரத்தால் இலங்கை
தீயவன் கண்ணன் சிரம் அறுத்தான்
திருவேங்கடத்து
தூயவன் கண்ணன் புடையார்க்கு
வைகுந்தந்தூரமன்றே

(திருவேங்கடத்தந்தாதி-பாடல்-5)

## திருவேங்கடவர் பதந்தொழுது உய்ய எண்ணீர்

சிறக்கும் பதந்தருவார் திரு
வேங்கடச் செல்வர் செய்ய
திறக்கும் பதந்தொழு துய்ய
எண்ணீர் நெறியிற் பிழைத்து
மறக்கும் பதந்தியும் சேலும்
அசுணமும வண்டினமும்
பறக்கும் பதங்கமும் போல்
ஐவரால் கெடும் பாதகரே.

திருவேங்கடத்தந்தாதி-பாடல்-27)

என்கிறார்.

"கோபகுணத்தையும் மஸ்தகத்தையுமுடைய யானையும், மீனும், அசுணமென்ற பறவையும், வண்டு வகைகளும், பறக்கும் விட்டிற்பறவையும் போல் நன்னெறியினின்று தவறி பஞ்சேந்திரியங்களால் அழிந்து போகின்ற தீவினையுடையவர்களே! நீங்கள் எல்லாப் பதவிகளினுஞ் சிறந்த பரம பதத்தை தம் அடியாருக்கு தந்தருள்பவரும், திருவேங்கடமலையில் எழுந்தருளியிருப்பவரும் எல்லாச் செல்வங்கட்கும் உரிய தலைவருமான எம்பெருமானுடைய சிவந்த நிறமமைந்த திருவடிகளை வணங்கி ஈடேறுமாறு நினையுங்கள்" என்று உபதேசிக்கிறார் கவி.

ஐம்பொறிகட்கு உரிய சப்த, ஸ்பர்ச ரச, ரூப கந்தம் என்னும் ஐம்புலன்களி[illegible]சையாற் கெடு

தூறகு யானை முதலிய ஐந்து பிராணிகள உவமை கூறப்பட டுளளது. அதன் விளக்கம் காண்போம்.

யானை பரிசத்தால அழி யும். வேடர் யானைக்காட டிறகுச செனறு அஙகு ஒரு பெரும் பளளம் பறித்து அதன் ஒரு புறத்தில் தாம் பழக்கிய பெண்யானையை நிறுத்தி வைப்பர். ஆண் யானை அதனோடு சேரும் விருப்பத தால் ஓடிவரும், படுகுழியில விழும். பிறகு அதனைத தந்திர மாக தம் வசப்படுததிக் கொள் வர். இது மெயயென்னும பொறிக்கு உரிய ஊறறினபத தாசையால் அழியும்.

மீன் ரசத்தால் அழியும. தூண்டிலில் வைக்கப்பெற் றுள்ள தசையை உண்ண வேண டும் என்ற அவாவினால் மீன விரைந்து வந்து அதில் வாயினை வைத்து அம்முள்ளில் மாட்டிக்கொள்ளும். வலைஞர எடுப்பர். இது வாய் (நாக்கு) என்றும் பொறிக்குரிய சுவை யின்பத்தின் ஆசையால அழிந் தது.

அசுணம் சப்தத்தால் அழி யும். இது இசை விலங்கு. குறிஞ்சி நிலப்பறவை. இத னைப் பிடிக்க விரும்பும குற வர்கள் நிலவு காயும் மாலைப பொழுதில் வேய்ங்குழல் முதலி யவற்றால் இன்னிசையை எழுப் புவர். அந்த சங்கீதத்தைக் கேட்டு ஆனந்தமடையவிரும்பி அருகில் வரும். அப்போது குற வர்கள் பறையோசையை முழக் குவர். அக்கொடிய ஓசை யைக் கேட்டவுடன் அப்பறவை கள் இறந்துவிடும். இது செவி யென்னும் பொறிக்குரிய ஓசை யின்பத்தின் ஆசையினால் அழி யும்.

வண்டு கநதத்தால் அழியும். வண்டுகள மலரகளின நறு மணத்தை விரும்பும்; மலர்க ளில் தங்கும; அம்மலர்கள குவியும்; அதில் அகப்படடு தவிக்கும். இது மூக்கென்னும் பொறிக்கு உரிய நாற்றவின் பத்திலாசையால் அழியும.

விட்டில் ரூபததால அழியும். விடடில் பறவை விளக்கொ ளியைக் கண்டவுடன் அதனி டத்து அவாவோடு ஓடி வந்து விழுநது இறந்து படும். இது கண என்னும் பொறிக்குரிய ஒளியின் ஆசையால் அழிந தது. மனிதன ஐம்புலன்களை யும் ஒருசேர நுகரத்தொடஙகி அழிந்து படுகிறான. அவவாறு ஆகாமல திருவேங்கடவன் திரு வடிகளை நாடுங்கள்.

## திருவேங்கடவனைத் தவிர வேறு ரக்ஷகன் கிடையாது

சண்பக மலரகளினுடைய வாசனையுள்ள மகரந்தப்பொடி களை அரித்துக்கொண்டு வரு கிற நீரருவிகள் எந்நாளும் இடைவிடாது பெருகப்பெற்ற திருவேங்கடமலையில் எழுந்த ருளியிருக்கிற ஒப்பற்ற கடவுளே! மனத்தில் உனனை விரும்பு கினற தாசனான என்னை உன் பக்கல் சேர்த்துக்கொள் ளாது தள்ளிவிட எண்ணியோ ஆட்கொணடு , சீரதிருத்தாமல், கெடுக்கினற பஞ்சேந்திரியஙக ளுக்கு என்னை உணவாக்கிவிட டாய். இனி நான உன் னையனறி உய்யும் வகை எவ வாறோ? என்கிறார் கவி.

கருத்தாதரிக்கும் அடியேனைத்
தள்ளகருதிக் கொலோ
திருத்தா தரிக்கும் ஐவர்க்கிரை
ஆக்கினை செண்பகத்தின்
மருத்தா தரிக்கும் அருவி அரு
வடவேங்கடத்துள்
ஒருத்தா! தரிக்கும் எங்ஙனே
இனியுன்னை விட்டே
(திருவேங்கடத்தந்தாதி-பாடல-41)

இப்பாடலில் தன்னுடைய அநந்யகதித்து வத்தையும் (இறைவனையன்றி வேறொரு இரடசகனையின்றியி ருக்கும் நிலை) ஐம்பொறிகளின் (மெய், வாய், கண், மூக்கு, செவி) கொடுமையையும் கவி கூறுகி றார்.

## திருவேங்கடவனுக்கு திருவேங்கடவனே உவமானம்

"கீரத்தியையுடைய கோசலை அன்னைக்கு அருமையான முத் துப்போன்ற குமாரனே! திரு வேங்கடமுடையானே! கரியா னது பொனனையொத்த போதி லும், நீலகண்டனான சிவன், பிரமன் முதல் உம்பர் எல்லாம் உனனையொக்க மாடடார்கள். ஆதலால் முன்பு கஜேந்திராழ வானைப் பாதுகாத்தவனான உனக்கு உன்னையே உவமான மாகக் கூறுவதன்றி வேறோர் உபமானஙகூறும் வகையில்லை" என்கிறார் திவ்யகவி.

உன்னைக் கரிய மிடற்றனயன் முதல்
உம்பர் எல்லாம்
பொன்னைக்கரியொத்த போது
மொய்வார் புகழ்க் கோசலையோ
மன்னைக்குக்கரிய முத்தே யப்பனே
யுன்னையன்றிப்பின்னை
முன்னைக் கரியளித்தாய்க்குவமான
மொழியில்லையே
(திருவேங்கடத்தந்தாதி-பாடல்-42)

ஆழ்வார் "தன்னொப்பாரில லப்பன" "ஒத்தாரைமிக்காரை இலையாய மாமாயா" "ஈடு மெடுப்புமிலீசன" என்ற திரு வாயமொழியையும் "தனக்குவ மையில்லாதான்" என்ற திருக் குறளையும் இங்கு ஒப்பிடுக் காணலாம்.

திருவேங்கடவன் திருவடிகளே சரணம.

*******

(முன்இதழ்த் தொடர்ச்சி)

# மூவர் போற்றிய முதல்வன்

டாக்டர். கே.ஏ. மணவாளன் - சென்னை.

தொண்டை நாட்டில் திருக்கடல்மல்லை எனனும மகா பலிபுரத்தில ஐப்பசி அவிட்ட நாளில் அவதரிததவர பூதத்தாழ் வார். இவர் உலகத்தார் போல் ஒருதாய் வயிற்றில் பிறவாமல ஒரு மலரில் பிறநதவர். 'பெருநத மிழன்' எனறு தன்னைச சொல் லிப் பெருமைபபடும இவர திருவேஙகடவனை முழு முதற கடவுளாகக் கண்டு போறறிய பல பாடல்கள திவவியப பிர பந்த இயற்பா வகுபபில் இரண் டாம் திருவநதாதியில காணப் படுகினறன. 'தொண்டர்க்கு அமுதுண்ணச் சொனமாலைகள் சொனனேன்' எனனும்படி, இவ் வாழ்வார திருமலைஅபபனை அமுதனன சொனமாலைகளால போற்றிப பரவியுளளார. இவர பாட்டின் தொடககத்திலேயே அனபு ஆர்வம் இனபு எனற சொற்களைப பயனபடுததியுள ளார.

எம்பெருமானிடததில இவ் வாழுவார்க்குப் பகதியும காத லும் உணடாகி, அது கணுக்கணுவாக வளர்நது சென்றதனால் பரஞான தசையை அடைந்து உள்ளடங காமல் அவை பாசுரங்களாக வநதுள்ளன என்பது வியாக்கி யானம். கடவுளின் அவதார காரணத்தை இவ்வாழ்வார் கூறுவது உற்று நோக்குதறகுரி யது. இருந்த இடத்திலிருந்தே தன் விருப்பத்தை நிறைவேற றிககொள்ளும் ஆறறல் படைத தவன் இறைவன். அப்படி யிருகக அவன இராமனாக வும, கணணனாகவும அவதரிக் கவேண்டுமா? மறறும திரு வேஙகடமலையில அரச்சா மூரத்தியாக வநது நிறகவேண் டுமா? எனபன போன்ற கேள்வி களுககு வைணவ உரையாசிரி யரகள அழகாக பதில் கூறியுள ளனர. "ஈசுவரன அவதரித்துப் பணணின ஆனைததொழில் களெலலாம பாகவத அபசாரம பொறாமை' என்று ஜீயர பலகா லும அருளிசசெயவர என்பது ஸ்ரீவசன பூஷண திவ்விய ஸூக்தி. இராவணன் முத லான தீயவரகளைத தன ஸங் கலபமாகிற எண்ணததாலேயே அழிககககூடுமாயினும 'பரிதரா ணாய ஸாதூநாம' எனறு சொல லபபட்ட நல்லவரகளைக் காப் பாறறுவதாகிய கொளகையை இறைவனுடைய ஸஙகல்பத தால (எணணததால) நிறைவேற றமுடியாது 'ஒருநாள காணவா ராயே-மணணும் விணணும் மகி ழுவே' எனறு பகதரகள பக வானுடைய திவவிய மங்கள விகரஹததை (வடிவை) கண் ணாரக்காணவேணடும என்றும, அவனை அணைத்து மகிழ வேணடும் எனறும விரும்பு கிறாரகள. அவரகளுடைய எண ணம நிறைவேற நாராயணன் அன்று ராமனாகவும கண ணனாகவும் அவதரிதது நல் லவர்களாகிய முனிவர்களுக்கும் தேவரகளுக்கும காடசி தந் தான. அப்படிக் காட்சி தநத அநத வைகுணடாதிப தியே இன்று இககலி காலத் தில் பக்தர்கள கண்டு வணங்க வும் போற்றி மகிழவும் மூங்கில் கள் நிறைநத குளிரநத சார லையுடைய திருவேங்கடமலை யில வந்து காட்சி தருகிறான். இதனை ஆழவார் பாடலால் அறியலாம்.

சென்ற திலங்கைமேல் செவ்வேதன்
சீற்றத்தால்
கொன்ற திராவணனைக் கூறுங்கால்
நின்றதுவும்
வேயோங்கு தண்சாரல் வேங்கடமே
விணணவர்தம்
வாயோஙகு தொல்புகழான வநது

குளிர்நத அருவிகள பாயும் இததிருவேங்கடம் வானோர்க ளாகிய தேவரகளுக்கும், மண் ணோர்களாகிய இந்நில உலகத்த வர்களுக்கும் வைப்பாய - க்ஷேம நிதியாய் இருக்கிறது. "மந் திபாய் வடவேங்கடமாமலை, வானவரகள சநதி செய்ய நினறாரா" எனறார திருப்பாணாழ் வாரும. நீரையும மலர்களை யும் சுமநது, சுடர தீபம கொண்டு, தேவரகளும தேவாதி ராஜனான இந்திரனும் வந்து வழிபாடுசெயயுமிடம் இத்திரு வேங்கடமலையாகும். இதனை 'சுமந்து மாமலர் நீர் சுடரதூபம் கொண்டு, அமர்நது வானவர வானவர் கோனோடும், நமன் றெழும் திருவேங்கடம்' என்ற திருவாய்மொழியாலும உணர லாம்.

மற்றும் பூதத்தாழுவார் தம்மு டைய மனததினுள்ளேயே திரு வேங்கடமுடையான் நித்யவா

ஸம் பண்ணுவதை வெகு சமத்காரமாக அருளியுள்ளார. தேவாதிதேவனான பரமபதநா தன் அடியார்களைக காப் பாற்ற வேண்டும் என்ற பெருந கருணையால் அவர்கள கூக்கு ரல் கேட்கும்படி வைகுணடத திலிருந்து திருப்பாறகடலுககு வந்து சேர்ந்தான். பினபு ஏழை எளியவர்களுக்கும் பாம ரர்களுககும் உதவும் வகையில் ஸ்ரீகிருஷ்ணனாக வநதவதரித தான். இப்படி வருவதும போவ துமாயிருததல் கூடாது எனறு ஸ்திரப்பிரதிஷ்டையாக இவ வுலகிலேயே இருநது ரக்ஷிகக ஆசைபபட்டு, கோயில் திரு மலை முதலிய திருப்பதிக ளிலே எழுந்தருளினான. அபப டிப்பட்ட பரமதயாளுவான ஸர வேச்வரன் திருமலை அப்பன, ஸ்ரீநிவாசனாக எனனெஞசிலே வந்தமர்நது நிதயவாசம செய கிறான் எனறு பெருமைபபடு கிறார் பூததத்தாழ்வார.

*மனத்துள்ளான் வேங்கடத்தான்*
*மாகடலான் - மற்றும்*
*நினைப்பரிய நீளரங்கத் துள்ளான்*
*எனைப்பலரும்*
*தேவாதி தேவனெனப்படுவான்*
*முன்னொருநாள்*
*மாவாய் பிளந்த மகன்.*

மற்றொரு பாட்டில் இலலற இனபங்களைத் துறநது இததி ருவேங்கடத்து எம்பெருமானைத் துதிப்பவரகளே அவன எழி லார திருமேனியில் கண வைத் துப் போறறி வணஙகுபவர களே இப்பிறவிககடலைக கடந்து பெருவீடாகிய மோக்ஷ உலகை அடைவார்கள் எனகி றார ஆழ்வார்.

*நினைப்பன் திருமாலைக் நீண்டதோள காண*
*நினைப்பார் பிறப்பொனறும் நேரார்.*

எனபது ஆழ்வார் திருவாக்கு.

பகுததறிவு கொண்டு மனி தராய்ப் பிறந்த மாந்தரெல் லாம எப்போதும் மாதவனா கிய ஸ்ரீநிவாஸன் பெய ரைச் சொலல வேணடும எனகி றார ஆழ்வார. செங்கணமாலா கிய அமமாதவனின திருநா மததை மறந்தாரை மானிடமாக அதாவது மனிதரகளாகக கருத மாட்டேன் என்கிறார.

*“சிறந்தார்க் கெழுதுணையாம்*
*செங்கண்மால் நாமம்*
*மறந்தாரை மானிடமா வையேன்*

எனபது அவர் கொள்கை ப்ரக டனம்.

## ஆழ்வாரின் தமிழ்ப்பற்று

பூதத்தாழ்வார பெருந்தமிழன என்று தனனைச் சொலலிக கொளவதறகேற்ப திருமலையின இயற்கை அழகை இவர வரு ணித்திருபபது தனிசசிறபபா கும். ஆழவாரின தமிழ்ப்புல மைக்கு எடுத்துக்காட்டுமாகும். சில காணபோம்.

*‘வெறியார்தண்சோலைத்*
*திருவேங்கடம்’ என்றும்,*
*‘சிந்துபூமகிழும் திருவேங்கடம்’*
*என்றும்,*
*‘தேனார் பூஞ்சோலைத்*
*திருவேங்கடம’ என்றும,*

பல இடஙகளில வருணிக்கப்பட் டுள்ள இத்திருமலை செடிகொ டிகளைப் பூககளை அடர்த தியாகக் கொணடு விளஙகு வது. வேடரகளால அமைககப் பட்ட ஒற்றையடிப்பாதைகளும் - சிதைந்த கல படிக்கட்டுக ளும் செடிகொடிகளால் மறைக் கப்பட்டிருக்கும். அவ்வழிக ளின் இருபுறங்களிலும எண் ணற்ற தவயோகிகள் தவம செய்கின்றார்களாம். அவர்கள் மூச்சுவிடுதல், உடம்பசைத்தல் முதலியவைகளைச் செய்யா மல் வால்மீகி முதலிய முனி வரகளைப்போல் யோக நிலை யில் ஆழ்ந்து கிடககின்றனர். அவரகளது கூந்தல் கற்றையா னது (முடியானது) அவர்கள் முகத்தை - முன்னின்று பின் தாழ்ந்து மூடி மறைத்துள்ளது. இதைக் கண்ட பூங்கொடிகளா னவை, சில மனிதரகள் முனிவர்கள தவம் செயகிறார்கள் எனபதை அறியாமல இவைக ளும் சிறுமலைகளே - கற்களே என்று எண்ணி அவற்றின்மேல் படரகினறனவாம்.

முன்பு வால்மீகி முனிவர் மீது புறறுமண் மூடினாப் போல், இந்த பக்தர்களின் மேலும பூஙகொடிகள் படர்ந் திருபபது அற்புதமான காடசி யாய ஆழவார்ககுத் தோன்றி யது. அதை அவர் பாட லாககிப பெருமானுககுச் சமர்ப் பிததுள்ளார. இதனால் மலை யப்பனைத் தவிர மலைபடு பொருள்களெல்லாம் ஆழ்வார்க குத தெய்வதத்தன்மை வாய்ந்த னவாக விளங்குவதை அறிய லாம்.

ஆழ்வாரின மற்றொரு சொல் லோவியததைக காண்போம்.

காடும வேடும் உடை வேங் கடம் எனறபடி திருமலைககாட் டில விலங்குகளும எமபெருமா னுககுப் பணிவிடை செய்யும் விதத்தை ஆழ்வார வியந்து கூறுகிறார. பொழுதுவிடியும் முன்னே இருள பிரியாத விடி காலைநேரம அது. அந்த நேரததில் முனிவரகள் துயில் விட்டு எழுநது நீராடி இறை வனைத் துதிதது வணங்கு வார்கள. திருமலையில் வாழும்

வானரங்களாகிய குரங்குகளும விடிகாலையில் எழுநது பூத்த சுனைகளிலே நீராடி, அசசுனை யிலுள்ள பூககளைப பறிததுக கொணடு போய் கோவிந்தன குணம்பாடித் துதி செய்கினற னவாம். இதைக்கண்ட ஆழ் வார் தம நெஞ்சுக்கு உபதே சம் செய்கிறுர். ஏ, நெஞ்சே! அக்குரங்குகளைப் போல நாண் மலர் கொணடு நம்வேஙகட வாணனுடைய பெருஙகுணஙக ளைச் சொலலி அவன திருநா மஙகளைச் சொலலி அவன் திருவடிகளில் அரசசிப்பாயாக - பூஜை செய்வாயாக எனறு கூறுகிறுர. பாட்டைக்காண போம்.

போதறிநது வானரங்கள் பூஞ்சுனை
புக்கு - ஆங்கலர்ந்த
போதரிந்து கொணடேததும் போது
-உள்ளம் போது
மணி வேங்கடவன
மலரடிக்கே செல்ல
அணி வேங்கடவன் பேர்ஆய்ந்து.

இப்படிப்பட்ட எமபெருமா னைச் சிறநத சநதனம், திவ் வியமான ஆபரணம உயரநத பீதாம்பரம நறுமணம மிக்க நலல மலலிகைமலர் ஆகிய இவறறைக்கொணடு செனறு திருவேங்கடத்து எமபெருமான திருவடிகளைத துதிதது வணங் குவதே ஆனமா ஈடைததேற வழி எனகிறுர ஆழ்வார்.

வரைச சந்தனக் குழமபும
வான் கலனும் படடும்
விரைப் பொலிந்த வெண்
மல்லிகையும் நிரைத்துக்கொண்டு
ஆதிக்கண் நினற அறிவனை
அடியிணையே
ஓதிப் பணிவ துறும்.
எனபது ஆழ்வார் பாசுரம்.

ஆழ்வார் பெருநதமிழர்தான என்பதற்கு மறறொரு சுவை யான இடம காணபோம். எலலா ஆழ்வாரகளுமே, இருந் தமிழ நனமாலை இணைய டிக்கே சொனன பெருந் தமிழர்களாயிருநதாலும, தமமு டைய அடஙகாப்பெருமகிழசசி யினால "யானே இருந்தமிழ மாலை இணையடிக்கே சொன னேன; பெருமதமிழன நலலேன பெரிது" எனறு தமமைததாமே புகழ்நது கொள்கிறுர ஆழ்வார. அது முறறிலும தகும என பதை அவர பாடடாலேயே நாம உணரலாம.

திருவேங்கட மலையில் களி றும பிடியுமாக இரண்டு யானைகள ஒனறோடொன்றுத தழுவி இன்பமாகச செல கினறன. அவறறுள பிடி யாகிய பெணயானை கருவுற் றிருநதது போலும கரப்ப காலததில பெணகள விரும புமு பொருளகளை ஆணகள் வாங்கிக்கொடுப்பது, அவர்க ளுடைய ஆசையை நிறை வேறறுவது இயறகைதானே: அவவகையில திருமலையில செலலும அநத யானைத தமபதிகளில் மதம் கொணட ஆண யானையானது தன் பேடையாகிய பெணயானைக்கு இனிய உணவு கொடுத்து அதனை மகிழவிக்க விரும பியது. உடனே வழியில் காணபபடட மூஙகில மரததின குருததைப பிடுஙகிப பக் கத்துமரததிலுள்ள தேன கூட் டில குததி இருகணுக்களுக்கி டையில தேனைச் சேகரித துத் தோயதது அபபிடியின வாயிலே பிழிந்ததாம. இபப டிக் களிறுமபிடியும இணைந்து இனிதே மகிழநது வசிக்கும திரு வேஙகடமலை எனறு ஆழ்வார் இக்காடசியை வியநது பாராட் டியுள்ளார்.

இப்பாட்டில கூறப்பட்ட களிறு திருவேஙகடமுடை யானே. பிடி-பிராட் டியே. பிராட்டி உகக் கும் படியாக இனியதேனைக் கொடுதது மகிழவிககிறுன் எம் பெருமான். இப்படி இரு வருமாக மகிழ்ந்து நிற்கும் நிலையில அலரமேல்மஙகை யுறை மாரபனான திருவேங்கட முடையான இவ்வுலகத்தவரை ரக்ஷித்து நிற்கிறுன என்று இரா மாநுஜர இப்பாட்டுக்கு உள்ளு றைப்பொருள் கூறி இப்பாடல் 'தவயம்' என்னும் மகாமந்திர விவரணமே என்று போற்றியுள் ளார்.

இனி பாடலைக் காண்போம்.

பெருகு மதவேழம் மாப்பிடிக்கு
முன்னினறு
இருகண் இளமூங்கில் வாங்கி
அருகிருந்த
தேன்கலந்து நீட்டும் திருவேங்கடம்
கண்டீர்
வான்கலந்த வண்ணன் வரை.
எனபதே அச்சோல்லோவியம்.

(அடுத்த இதழில் முடியும்.)





# திருவேங்கடமுடையான் திருநாமங்கள்

திரு. எம்.எஸ். வெங்கடாச்சாரி - செய்யாறு.

*அகிலபுவந ஜந்மஸ்தேம பங்காதிலீலே*
*விநத விவிதபூதவ்ராத*
*ரக்ஷைகதீக்ஷே*
*ச்ருதிசிரஸி விதீப்தே ப்ரஹ்மணி*
*ஸ்ரீநிவாஸே*
*பவது மம பரஸ்மின் சேமுஷீ*
*பக்திருபா*
*--ஸ்ரீராமானுஜர்*

திருமகள் கேள்வனைப் பரம்பொருளாகப் போற்றும எம்பெருமானார். (ஸ்ரீஇராமாநுஜர்) தம் ஸ்ரீபாஷ்யம் நூலுக்கு மங்கள சுலோகம் ஒன்றை இயற்றியுள்ளார். அந்த மங்கள சுலோகத்தில் பலரும அறிநத "ஸ்ரீநிவாஸன்" என்னும் திருவேங்கடமுடையானின் திருநாமம் மூன்ரும் பாதத்தில இடம் பெற்றுள்ளது. எமபெருமானாரைப போற்றும் இராமாநுச நூற்றந்தாதியில, "ஓதிய வேதத்தினுட்பொருளாய் அதனுச்சி மிக்க சோதியை நாதனென அறியாதுழல்கினற தொண்டரபேதமை, தீர்த்த இராமாநுசன்" என்று இராமாநுசர் போற்றப்பெறுகிருர். மேறகூறிப இரு செயதிகளையும் சேர்த்து நோக்கும்பொழுது பரமபொருள் (பிரமமம) ஸ்ரீநிவாஸனே எனறு தெளிவாகிறது. அவன திருத்தாளகளை வணங்கி அவன திருநாமஙகள் பறறிச சிறிது காணலாம.

கலி காலத்தில் பெருமளவில் மக்கள் போறறி வழிபடும திருக்கோலம் திருவேங்கடமுடையானுடையதாகும. திருவேஙகடமுடையான் இரணடு திருக்கரங்களை மேலநோக்கிய வணணம் வைததுக்கொணடு ஸேவை ஸாதிக்கிருன். அவை அசுரர்களுக்கு அச்சததைத தரும் திருவாழியையும் திருச்

சங்கினையும் தாஙகுகின்றன. வலத் திருககரததால் தன் திருவடிகளைக் காட்டிக் கொண்டு நிறகிறுன. தன் திருவடிகளைச சரணடைநதவரகளுக்குப பிறவியாகிய பெருங்கடல் இடுப்பளவு எனறு காட்டுமுகமாகத் தன் தொடையை இடக கரத்தால் தொட்டுக் காட்டிக கொணடு நிறகிறுன. திருமார்பில் திருமகள எழுநதருளியிருக்கிறுள. ஸ்ரீசாளககிராமமாலை, ஸ்ரீஸஹஸ்ரநாமாமாலை, யஞ்ஞோபவீதம், மகரகணடி, விலவ மாலை, காசுமாலை, திருககரண பதரங்கள், திருவடி முதலான பல திருவாபரணங்கள் அவன் திருமேனியை அணிசெயகின்றன. அவன தோளிணை மேலும் நன்மாரபின மேலும் சுடர முடி மேலும திருமாலைகள அணிசெயகின்றன; அவன நெய விளககுகளினொளியில ஊர்த்வபுண்டரததுடன் அழகாக ஸேவை ஸாதிககும சிறப்பினை ஒருமுறை ஸேவிததவர் "எனனமுதினைக் கண்டகண்கள மற்றொன றினைக் காணுவே" என்று கூறுவர்; "மறறை நம் காமங்கள மாறறு" எனறும அவன திருமேனியழகில ஆழுங்காட்படுவார். இந்தத திருக்காட்சியைக் காண உலகததின எலலாப் பகுதிகளிலிருநதும மககள வருகினறனர். பெருமாள் ஸேவையைப் போனறு அவர்கள் ஸேவையைப் பெற நம் மனம் விழைகிறது; அவரகள் "கோவிந்தா! கோவிநதா! கோவிந்தா!" என்று இறைவனை அழைக்கும் ஒலியைக் கேட்க நம் காதுகள் விழைகின்றன.

"வேங்கடாத்ரி ஸமம் ஸ்தானம்
ப்ரஹ்மாண்டே நாஸ்தி கிஞ்சன
வேங்கடேச ஸமோ தேவோ
நபூதோ நபவிஷ்யதி"

என்னும் சுலோகம் கூறும் கருத்து உணமையே எனறு நம் மனம ஏறகிறது. அதத கைய பெருமையுடைய திருவேஙகடமுடையானின் திருககுணஙகளிலும திருமேனியழகிலும் ஈடுபடட வசிஷ்டர நாரதரை நோக்கி,

"பகவத ஸவரூபமுடைய நாரதரே! பிரம்மா திருவேஙகடமுடையானை எநதத திருநாமஙகளை அநுஸநதானம் பணணிக கொண்டு, தாமரை மலரகளால் அருசசனை செயதார? அவைகளைப பறறி அறிய விருமபுகிறேன" என வினவினார. அவ்வினாவினைச செவியுறற நாரதர்,

"அரியின திருநாமங்கள எண்ணிலடங்கா! அறிய வேணடிய வேத சப்தஙகளில் ஓதபபடும அவன் ஒருவனே அறியபபெற வேணடியவன; அவன மிகவும உயரந்தவன; அவன பரம புருஷன; ஆதியும அநதமும இலலாதவன; அநேக அவதாரஙகள எடுததவன; அவ்வெமபெருமானுடைய திருநாமங்களின பெருமையின் எலலையைக காணுதல் யாருககும இயலாத காரியம்; ஆயினும, திருவேஙகடமுடையானின் சில திருநாமங்களைச் சொலலுகிறேன....."

எனறு கூறித திருவேஙகடமுடையான பெருமை பேசும ஆயிரம திருநாமங்களை வசிஷடருக்கு நாரதர உபதேசம் பணணியருளினார. அத்திரு நாமங்கள் திருவேஙகடமுடையான திருவாராதனததின முக்கிய அங்கமான அர்ச்சனையில் (முதல் அர்ச்சனை) நாள்தோறும் ஓதப் பெறுகின்றன.

எம்பெருமான் இவவுலக மக்கள் உய்ய வேண்டும் என னும நலலெணணம் காரணமாக பல நூல்களை இருடிகள மூலம் அருளிச்செய்தான. ஆயினும, கலியுகததின் தெய்வமான தனனைக (திருவேங்கடவனை - கலௌ வேங்கடநாயக:) கலியுகததில இறைவன அருளைப பெறச் சிறந்த வழியாக விளஙகும நாம ஸங்கீர்ததனம் மூலம (கலௌ நாம ஸங்கீரததனம) அனைவரும தொழுது உயய வேணடும் எனனும உயர கொளகை காரணமாகவே திருவேஙகடமுடையான இச்சீரிய ஸஹஸரநாமத்தை நாரதர் மூலமாக வசிஷ்டருக்கு உபதேசிததான். இநத ஸஹஸ்ரநாமததின இறுதியில் இடமபெறும பலச்ருதியில நாரதர்,

"இநதத திருநாமங்கள் தூயவை; புண்ணியத்தைப் பெருககுபவை; பாவத்தைப் போககுபவை; வறுமையை அகறறுபவை; எல்லாசசெலவஙகளையும அடையச் செய்பவை; காலனைத தூரததுபவை; நஞ்சினை முறிப்பவை; சுரம் மறறும நோயகளைப் போக்குபவை; பகைவர்களை அழிப்பவை; அரசனாலும் கிரஹஙகளாலும உணடாகும் துன்பஙகளை அகறறுபவை; பிரமம ராக்ஷஸ, வேதாளம் முதலிய தீய சக்திகளால் பயம் வாராவணணம காப்பவை. இந்த நாமங்களை ஓதுபவன கல்வி கற்க விழைந்தால நன்கு கல்வி கற்பான; செல்வம் அடைய விழைந்தால் நற்செல்வம் அடைவான்; நீணட ஆயுளும் பெறுவான்; புதல்வர்களைப் பெற விழைந்தால் நல்ல குணமும் நீண்ட ஆயுளுமுடைய புதல்வரகளைப்பெறுவான்; போரின் மேறசெல்லுங்கால் போர்க்களத்தில வெற்றி பெறுவான்; சொற்போரில் ஈடுபடுபவன் தன் முயற்சியில் வெற்றி பெறு

